REG. NO. M. 3888 16 பக்கங்கள் விலை அரை அணா

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்
அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
நிரந்தர விளம்பரம் அங். 1-க்கு 1—0—0
ஒப்பந்த விளம்பரத்திற்கு மானேஜருக்கு எழுதவும்

(தேசிய வாரப் பத்திரிகை)

வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 18 | காரைக்குடி, பிரமாதி௵ வைகாசிமீ 18௳ வியாழன் (1—6—1939) | இதழ் 48

## முன்னேற்றக் கட்சி - நல்லதல்ல

பண்டித ஜவார்லால் நேரு

சுபாஷ் பாபு முன்னேற்றக் கட்சியை ஏற்படுத்த முற்பட்டிருக்கிறார். அவருடைய முயற்சி, நடந்த விஷயங்களினால் ஏற்பட்ட ஒன்று. இதன் காரணத்தை விளங்கிக்கொள்ள முடிகிறதாயினும், இது விரும்பத் தக்கதல்ல. ஏனென்றால் இதில் பல ஆபத்துக்கள் இருக்கின்றன.

இப்போது தெரிந்துள்ள மட்டில், முன்னேற்றக் கட்சிபிற்போக்கானது; இது ஒரு எதிர்ப்புக்கூட்டம். இதில் உள்ளவர்களை ஒன்றுய்ச் சேர்த்து வைத்திருப்பது ஒரு துவேஷஉணர்ச்சி அல்லது விரோத மனப்பான்மை. இத்துவேஷ உணர்ச்சி அல்லது விரோத மனப்பான்மை இன்றைய காங்கிரஸை நிர்வகிக்கும் தனிப்பட்டவர்கள் மீதோ அல்லதுகூட்டத்தார் மீதோ ஏற்பட்டிருக்கின்றது. குறிப்பிட்டதிட்டங்களை அடிப்படையாய்க்கொண்ட எந்த உருப்படியான கொள்கையும் கிடையாது. எல்லாத் திட்டங்களும் இருக்க வேண்டுமென்கிற வீ ணா சை தான் இருக்கிறது.

அரசியல் காரணங்களினாலோ அல்லது மற்ற காரணங்களினாலோ விரும்பத் தகாதவர்களை விலக்கி வைப்பதற்குக் கட்டுப்பாடில்லை. கட்சிக் கதவுகள் விரிச்சென்று திறந்து கிடக்கின்றன. எனவே, பல்வேறு கூட்டத்தாரும்இதில் புகுந்து ஒண்டிக்கொள்ள இடமேற்பட்டுப் போகும். காங்கிரசுக்குள்ளேயே நாம் போதுமான அளவு அனுபவித்துவிட்டோம். அனுபவித்தும் வருகின்றோம். பதவி வேட்டைக்காரர்களும் கட்சி வேட்டைக்காரர்களும் உள்ளே புகுந்துகொண்டிருக்கின்றனர். நீடித்த அனுபவத்தாலும், தனக்குரிய பலத்தாலும் ஓரளவு காங்கிரஸ் ஸ்தாபனம் அதைச் சமாளித்து வருகிறது. இன்னும் அவர்களைச் சரிவர கட்டுப் படுத்துவதற்குப் புதிதாக விதிகள் ஏற்படுத்த முயன்று வருகிறோம்.

இப் புதிய கட்சி அல்லது கூட்டத்தில், உருப்படியானகொள்கையும் கட்டுப்பாடுமில்லாத ஒன்றில், வேட்டைக்காரர்கள் உள்ளே புகுந்து சகல திருவிளையாடல்களையும் தாராளமாய்ச் செய்து காட்டுவார்கள். அழகான வார்த்தைகளைக்கொண்டு மயக்கி, ஆதிக்கம்பெற்று விடுவார்கள். பாஸிஸ்டுகளும் வகுப்பு வாதிகளும்கூட இக் கூட்டத்தில் சேரலாம். சேர்ந்து காங்கிரசுக்குவிரோதமாய் உழைப்பர். ஏகாதிபத்தியத்துக்கு எதிராய் நிற்கும் காங்கிரசின் செல்வாக்கைக் குலைப்பர்.

இத்தகையநிலைமை வந்தால் சுபாஷ் பாபு எப்படிச் சமாளிப்பார்? ரேடிகல் (தீவிர) சுலோகங்களையும், பொது ஜனங்கள் விரும்புகிற வார்த்தைகளையும் உச்சரித்துப் பகட்டித்தான் ஐரோப்பாவில் பாஸிஸம் வளர்க்கப் பட்டது என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

நம்முடைய தேசியத்தைப் போர்வையாய்ப் போட்டுக்கொண்டால், பாஸிஸத்தைப் பரப்புவது மிகச் சுலபம். ஏற்கனவே தேசியம் என்பது ஒரு வர்க்க உணர்ச்சிதான் என்றும், எனவே வர்க்க உணர்ச்சியைப் பரப்பி பிறவர்க்கங்களை அருவருப்பது தேசியமென்றும் சொல்லப்படுகிறது. ஆனால் நாம்அத்தகையதேசியஉணர்ச்சியுடன் வளரவில்லை. மற்றும் ஒரு விஷயத்தை எடுத்துக்கொள்வோம். நமக்கு யுத்த எதிர்ப்புக் கொள்கை மிக முக்கியம். நாம் அதைக் கடைப்பிடிப்பது விடுதலை ஆர்வத்தால்; ஜன நாயக தாகத்தால்; இந்திய சுதந்திர வேட்கையால். ஆனால் இதே கொள்கையைச் சிறிது மாற்றிப் பாஸிஸ ஆசைகளுக்குப் பயன்படுகின்றாற்போலாக்கிக் கொள்ளமுடியும். யுத்தம் வந்தால் இங்கிலாந்தின் பாதையில் இந்தியா ஒரு முள்வேலி போலிருப்பதைப் பாஸிசத் தேசங்கள் மிக விரும்பும். நாம் ஏற்படுத்துகிற நிலைமையிலிருந்து தாம் சாதகமடையப் பார்க்கும்.

ஏகாதிபத்திய பிரிட்டனை நாம் வெறுப்பது போலவே, பாஸிசத் தேசங்கள் கைக்கும் நாம் ஆதரவு தந்துவிடக்கூடாது. எனவே நம் யுத்த எதிர்ப்புக் கொள்கை விடுதலை பெறுவதற்காகவும், ஏகாதிபத்தியத்தையும் பாஸிசத்தையும் எதிர்ப்பதற்காகவும் இருக்கவேண்டும்.

### ஸ்ரீ ராய்

முன்னேற்றக் கட்சியிலுள்ள அபாயங்கள் இவை. கொள்கை இன்னதெனத் தெரியாததால், அதை முற்போக்குடைய தெனச் சொல்வதற்கில்லை, ஒரு திட்டமான கொள்கையை வகுக்கவேண்டுமென ஸ்ரீ எம். என். ராய் மட்டுந்தான் முயற்சித்துவருகிறார். இவர் தொடர்ச்சியாகக் கட்டுரைகள் எழுதுகிறார். பிரசங்கம் செய்கிறார். இவருடைய அபிப்பிராயங்கள்தாம் முன்னேற்றக் கட்சியின் கொள்கையா? அல்லது இவ் அபிப்பிராயங்கள் கொள்கையை எவ்வகையிலாவது உருவாக்கப் பயன்படுகின்றனவா? இவருடைய அபிப்பிராயங்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தையும் கொள்கையையும் உடையன. நாம் செய்த எந்தக் காரியத்துக்கும் முரண்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ எம். என். ராயின் திட்டத்திலுள்ள தாரதாரங்களை ஆராயவேண்டியது என்னுடைய வேலையல்ல. ஆனால் இத்தனை ஆண்டுகளாய்க் காங்கிரஸ் கடைப்பிடித்து வந்துள்ள ஒன்றுக்குச் சவால் விடுவதுபோலாகும் அவருடைய அபிப்பிராயங்கள். அவைகளை ஒப்புக்கொண்டால் காங்கிரஸ் பிளவுபடும். அது விரும்பத்தக்கதோ, விரும்பத் தகாததோ.

காங்கிரஸில் பல மாறுதல்கள் ஏற்படவேண்டுமென்று நான் கூட ஆசைப்படுகிறேன். ஆனால் ஒழுங்காகக் கட்டுப்பாடுடன் மாறுதல்கள் ஏற்படவேண்டும். பிளவை யுண்டாக்கக் கூடாது. முன்பு செய்துள்ள காரியங்களுக்கு மதிப்பு வைத்து, அவைகளை அடிப்படையாய்க்கொண்டு மாறுதல்களைச் செய்யவேண்டும். தவறினால் குழப்ப முண்டாகும். பிற்போக்காளர் ஆதிக்கம் பெற்றுவிடுவார்கள். இந்தியாவில் இதுவரை நடந்துள்ளவைகளே நமக்குப் பாடம் கற்பிக்கப் போதுமானவை. சமீபத்தில் ஐரோப்பாவில் நிகழ்ந்துள்ளவைகளையும் நாம் உதாசீனம் செய்யக் கூடாது.

முன்னேற்றக் கட்சி ஏற்படுவதால், அதற்கு விரோதமான கூட்டங்கள் யாவும் ஒன்று சேரக் கூடும். கட்சி ஏற்படுத்தக் கூடாதென்பதற்கு இது காரணமல்லவாயினும், சரியான சந்தர்ப்பத்தில், சரியான வழியில்தான் ஒரு கட்சியை ஆரம்பிக்கவேண்டும்.

### எனக்குள்ள குறைகள்

முன்னேற்றக் கட்சி சம்பந்தமாக என் சம்பந்தப்பட்டமட்டில் சில குறைகள் உள்ளன. ஆனால் எவ்வழியில் பார்த்தாலும் ஏதேனும் குறைதான் அதில் காணப்படுகிறது. ராஜகோட்டில் சமீபத்தில் நடந்துள்ளவை மிக முக்கியமானவை. அவைகள்மூலம் எல்லா சமஸ்தானங்களிலும் இந்தியா முழுதும் பெரும்பலன்கள் ஏற்படப்போகின்றன. அரசியல் பிரச்னைகளில் காந்தியடிகளின் போக்கு எவ்வளவு தூரம் மாறியிருக்கிறது? அவரைப் பின்பற்றுகிற காங்கிரஸின் கொள்கை எவ்வளவுதூரம் பாதிக்கப்படும்? ராஜகோட்டில் மகாத்மா செய்தது சரியாயிருக்கலாம். எனக்கு விபரந்தெரியாமல் எதுவும் சொல்ல மாட்டேன். சில மாதங்களாய் ராஜகோட் விஷயமாக அவர் நடந்து கொண்டுள்ள விதங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை, பாராட்ட முடியவுமில்லை. எனவே, அரசியல் இயக்கம் இப்படிப்போனால் எப்படி என்று எனக்கு விளங்கவில்லை.

நான் அகில இந்திய சமஸ்தானப் பிரஜைகள் மகாநாட்டுக்குத் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பெற்றேன். நான் அற்புதச் செயல் எதையும் செய்யக் கூடியவனல்லன் என்பதையும், அசாதாரண காரியங்களை என்னால் சாதிக்க முடியாதே என்பதையும் உணர்ந்தேன். சமஸ்தானங்களின் விஷயம் ஒரு பெருஞ் சிக்கல். இடத்துக்கு இடம் வித்தியாசப்படும். என்றாலும் பொதுப்பட்ட ஒருகுறையுண்டு. எல்லாவற்றையும் சேர்த்துப் பொதுப் போராட்ட மாக்கிவிடலாமென நான் எண்ணினேன். ஆனால் நான் ஏதேனும் செய்ய முயன்றால், காந்தியடிகளுடைய போக்குக்கு ஒத்திராதென்று உணர்ந்தேன். அவருடன் தகாறு உண்டாக்கத்தக்க எதையும் நான் சொல்லவோ செய்யவோ விரும்பவில்லை. ஏனெனில் அதனால் சமஸ்தானங்களில் பெரும் குழப்பம் ஏற்படும். எனவே நான் சும்மாயிருந்து விட்டேன்.

ராஜகோட் சம்பவங்களால் நான் ஊக்கம் குன்றிவிட்டேன். எனக்குப் புரியாத விஷயங்களை நான் செய்ய மாட்டேன். இப்போது நடந்துவருவதை நான் விளங்கிக்கொள்ள முடியவில்லை. இது அகில இந்திய அரசியலுக்கும் பொருந்தும்.

காந்தியடிகளுடைய உயர்ந்த லட்சியத்தில் எனக்கு நம்பிக்கையுண்டு. பொதுவாழ்க்கையில் அவர் புகுத்தியுள்ள ஒழுக்கத்தைப் பாராட்டி வரவேற்றிருக்கிறேன். அவர் நீடூழி காலம் வாழட்டும். நம் எதிர்கால வாழ்க்கையை நிர்மாணிக்கட்டும்.

என்றாலும் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்ட முடிவுகளை அப்படியே ஒப்புக்கொள்வதா, எதிர்ப்பதா, சும்மாயிருப்பதா? எதுவுமே எளிதானதல்ல. அப்படியே ஒப்புக்கொள்வது மௌடிகம். ஒருபெரிய இயக்கத்தை, அதுவும் ஜனநாயக இயக்கத்தை அப்படி நடத்த முடியாது.

எதிர்ப்பதும் கடினம். நம்மைப் பலஹீனப்படுத்தும்.

சும்மாயிருப்பதென்றாலோ, அதாவது முடிகிறதா?

இதுதான் நம்மைச் சூழ்ந்துள்ள பிரச்னை.

—

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

Best copy available

ஹிந்தியிலிருந்து மொழிபெயர்ப்பு

# இடி வீழ்ச்சி

என். நாகரத்தினம், தியாகராயநகர்

[சிறு கதை எழுதுவதிலும் நாவல் எழுதுவதிலும் நிகரற்றவரெனப் பெயர் பெற்ற ஸ்ரீ பிரேம் சந்த் எழுதியது.]

டில்லி நகரின் தெருக்களும், சந்துகளும் அந்நகர மக்களின் இரத்தத்தால் மூழ்கிக் கிடந்தன. நாதிர்ஷாவின் சேனைகள் நகரின் நாற்புறங்களிலும் பயங்கரநிலையை உண்டாக்கியிருந்தன. எதிர்ப்பட்டவர்களெல்லாம் சிப்பாய்களின் வாளுக்கு இரையாயினர். இவ்வளவு கொடுமையான கொலைகள் நடந்தும் நாதிர்ஷாவின் கோபம் தணியவில்லை. அந்நகர சந்துகளில் ஓடும் இரத்த வெள்ளத்தால்கூட அவனுடைய கோபாக்கினி தணியவில்லை.

நாதிர்ஷா தர்பாரினுள்ள சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தான். அவனுடைய கண்களிலிருந்து தீப்பொறி பறந்தது. டில்லிவாசிகளுக்கு எவ்வளவு தைரியம், நாதிர்ஷாவின் சேனையை அவமானப்படுத்த! இதே காபிர்கள் முன்பு அவனுடைய சேனை சண்டைக்கழைத்ததும் பயந்து ஓடிவிட்டனர். அப்பேர்ப்பட்டவர்களுக்கு இப்பொழுது இவ்வளவு தைரியம் எங்கிருந்து வந்தது? எதிர்ப்பட்டவர்களை எமபுரம் அனுப்பும்படி சேனைகளுக்கு உத்தரவு. நகரவாசிகளின் கூக்குரல் கேட்டு சேனைகள் நடுங்கிவிட்டன. ஆனால் நாதிர்ஷாவின் கோபம் மட்டும் தணியவில்லை. அவனுடைய சேனாதிபதிகூட அவனுக்கு முன்னால் வர அஞ்சினான். வீரபுருஷர்கள் தயாளகுணமுள்ளவர்கள், திக்கற்றவர், பலஹீனமுள்ளவர்கள், பெண்கள் ஆகியோரிடத்தில் அவர்களுக்குக் கோபம் வருவதில்லை. ஆனால் கொடிய நாதிர்ஷாவின் வீரமோ தயவு, கருணை என்பவைகளையே அறியாதிருந்தது.

டில்லியின் பாத்ஷா, நாதிர்ஷாவின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தான். தனது இஷ்டம்போல எதையும் செய்யும் பாத்ஷா நாதிர்ஷாவின் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தான். எதிர்த்துப் பேச தைரியமில்லை. இவனுக்குத் தனது உயிரின் மேல் அதிக மோகம். கஷ்டப்படும் ஜனங்களை யார் காப்பாற்றுவது? நான் ஏதேனும் சொன்னால் நாதிர்ஷா என்னையே அதட்டுகிறார். நான் என்ன செய்வது என்று யோசித்துக்கொண்டிருந்தான்.

கடைசியில் சேனைகளின் கொடூரச் செய்கை எல்லையற்றுப் போனதையும் பிணக் குவியல் எங்கும் கிடப்பதையும் பார்த்ததும் டில்லி பாத்ஷா முகம்மதின் மந்திரியால் பேசாதிருக்க முடியவில்லை. அவன் கவிதையின் உட்கருத்தை அறிந்து மகிழ்பவன். தானும் ஒரு சிறந்த கவி. தனது உயிரையும் வெறுத்து நாதிர்ஷாவின் முன்னால் போய்:

“உனதுபார்வையாகிய கத்திக்கு முன் எவரும் தப்ப முடியாது. இப்பொழுது இங்கு எவரும் உனது பார்வைக்கு இலக்காவதற்கில்லை” என்று கூறி “பிணங்களை உயிர்ப்பித்து அவைகளைத் திரும்பவுங்கொலை செய்” என்ற கருத்தமைந்த பாட்டைப் பாடினான்.

இப்பாட்டு மனதில் ஒரு காயத்தை உண்டு பண்ணியது. கல்லினுக்கூடத் துவாரம் உண்டாவதுண்டு. மலைகளிலும் செழிப்பான இடங்களிருக்கின்றன. கொடிய கொலைகார இருதயத்தில்கூட ரசிக்கும் தன்மை இருக்கிறது. இப்பாட்டு நாதிர்ஷாவின் மனத்தை இளகச்செய்தது. நாதிர்ஷா சேனாதிபதியைக் கூப்பிட்டு கொலையை நிறுத்தும்படி உத்திரவிட்டான். ஒரேயடியாக வாள்கள் உறையில் சென்றன. வெட்ட ஓங்கிய கைகள் அப்படியே நின்றன. சிப்பாய்கள் நின்ற இடத்திலேயே மரப்பொம்மைகள் போல் நின்று விட்டனர்.

மாலையில் நாதிர்ஷா பாத்ஷாவின் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தான். அடிக்கடி அப்பாட்டு ஞாபகத்திற்கு வந்தது. அசைந்து அசைந்து அப்பாட்டை நினைத்துப் பாடினான்.

2

டில்லியின் கஜானா காலி செய்யப்படுகிறது. பாத்ஷாவின் அரண்மனையில் காவல் அதிகம். யாரும் வெளியில் போகவோ உள்ளே வரவோ கூடாது. கஜானாவிற்கு மட்டும் ஆபத்தல்ல. அரண்மனையிலிருக்கும் தங்க-வெள்ளிப் பாத்திரங்கள், விலையுயர்ந்த படங்கள், ஆடை ஆபரணங்கள்கூட வெளியில் கொண்டு வரப்பட்டன. நாதிர்ஷா சிம்மாசனத்தில் உட்கார்ந்து வைரம், இரத்தினம் ஆகியவற்றின் குவியலைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறான். ஆனால் எந்தப் பொருளுக்காக அவன் முதலிலிருந்து அதிக ஆவலுடனிருந்தானோ அப்பொருளைக் காணோம். அவன் முகல்—ஆஜம் வைரத்தைப் பற்றியும் அதன் மகிமையைப்பற்றியும் கேள்விப்பட்டிருந்தான்—அதை அணிந்து கொள்ளக் கூடியவன் தீர்க்காயுளை அடைவான், எவ்விதமான வியாதியும் அவனைவந்து அடையாது என்பனவேயாகும். டில்லி நகரத்தின்மேல் படை யெடுப்பதற்கு அநேக காரணங்கள் இருந்தபோதிலும் இவ்வைரத்தை அடைவதுதான் முக்கிய காரணம். தங்கம், வெள்ளி, இரத்தினத்தால் அவன் கண்களில் ஒருவிதமான பிரகாசம் தோன்றிற்று. ஆனால் அவன் மனத்தில் உத்சாகமில்லை. அவனுக்கு முகல்—ஆஜம் என்ற வைரத்தின் மேல்தான் கண். முகல் ஆஜம் அங்கில்லை. அவன் அதிகக் கோபத்தினால் மந்திரிகளை யெல்லாம் கோபித்துக் கொண்டான். தனது உத்யோகஸ்தர்களையும் விஷயம் புரியாமல் விரட்டிக் கொண்டிருந்தான். ஆனால் தனது மனதிலிருக்கும் அபிப்பிராயத்தை வெளியிட முடியவில்லை. அவன் ஏன் இவ்வளவு ஆத்திரப்படுகிறானென்று யாருக்கும் தெரியவில்லை. இதுவோ அதிகச் சந்தோஷத்தை அடைய வேண்டிய சமயம். ஒப்பிட முடியாத தனக்குவியல் எதிரிலிருக்கின்றது. யாரும் எவ்வளவென்று எண்ண முடியாது. உலகத்திலுள்ள எந்த மனிதனும் இக்குவியலில் ஒரு பாகத்தைப் பெறுவதிலேயே திருப்தியடைவான். ஆனால் இதற்குமுன் இவ்வளவு செல்வத்தைக் கனவிலும் கண்டறியான். தனது வாழ்க்கையில் பெரும் பகுதியை செம்மறியாடு மேய்ப்பதில் கழித்தவனாகிய இவனுக்கு ஏன் இவ்வளவு வருத்தம்? மாலைப்பொழுது நெருங்கிற்று. கஜானாவும் காலியாயிற்று. ஆனால் அந்த வைரம் அகப்படவில்லை. ஆகையினால் நாதிர்ஷாவின் கோபம் கொழுந்து விட்டெரிந்தது. காவியத்தால் இவன் மனத்தை மாற்றித் தனது நாட்டு மக்களைக் காப்பாற்றிய மந்திரியைத் தனிமையில் கூப்பிட்டுச் சொன்னான். “எனது கோபத்தை நீ பார்த்திருக்கிறாய். மறுபடியும் அக் கோபத்தைப் பார்க்க விரும்பவில்லையானால் விஷயத்தைத் தெளிவாக்க வேண்டும். இல்லையானால், மறுபடியும் அவ்வக்னி மூண்டால் டில்லி நகரம் அழிந்துவிடும்”

மந்திரி:- ஜஹாப்நாஹ், தாஸர்களாகிய எங்களால் என்ன ஏற்பட்டது? கஜானாவின் எல்லாச் சாவிகளையும் உங்களுடைய சிப்பாய்களிடத்தில் கொடுத்து விட்டோம்.

நாதிர்:— நீ என்னை ஏமாற்றி விட்டாய்.

மந்திரி:— உங்கள் கையில் கத்தி இருக்கிறது. நீங்களோ பலஹீனமானவர்கள். உங்களுக்கு எது இஷ்டமோ அதைச் செய்யுங்கள். ஆனால் இந்த அக்கிரமமான குற்றச்சாட்டை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்.

நாதிர்:— அதை வெளிப்படுத்த வேண்டியது அவசியமா?

மந்திரி:— ஆம், ஏனென்றால் ஏமாற்றுவதற்குத் தண்டனை கொலைதான். எவ்விதக் காரணமுமில்லாமல் கொலை தண்டனை சரியல்ல.

நாதிர்: இதற்குக் காரணம் என்னிடத்தில் இருக்கிறது. ஆனால் நாதிர் ஒருபொழுதும் எவருக்கும் காரணம் சொன்னது கிடையாது. அவன் தனது இஷ்டத்திற்கு பாத்ஷாஹ் யாருக்கும் காரணம் காட்டுதல் சொல்லுதல் தனது மரியாதைக்கு விரோதமாக நினைக்கிறவன். ஆனால் இங்கு ஜாதி மரியாதையாகச் சொல்லுகிறேன். நீ முகல்-ஆஜம் வைரத்தை ஏன் மறைத்து வைத்திருக்கிறாய்?

மந்திரியின் முகம் வெளுத்துவிட்டது. அவன்தனக்குத்தானேயோசிக்க ஆரம்பித்தான்.—இந்த வைரம் பாத்ஷாவுக்கு உயிரைவிடப் பெரிது. அவர் இதை ஒரு நிமிஷமும் தன்னிடமிருந்து பிறரிடம் கொடுக்கமாட்டார். அவரிடம் நான் எப்படி இவ்விஷயத்தைக் கூறுவேன்! அவருக்கு எவ்வளவு துக்கமுண்டாகும்! ராஜ்யம் போயிற்று, கஜானா போயிற்று, மரியாதை போயிற்று, ஆனால் பாத்ஷாவுக்கு இது ஒன்றுதான் மனநிம்மதியைக் கொஞ்சம் கொடுக்கிறது. இதைக் கொடுக்கும்படி எவ்வாறு கூறுவேன்! ஒருக்கால் அவர் அதிகக் கோபங்கொண்டு அதை எங்கேனும் விட்டெறியலாம்; அல்லது உடைத்துப்போடலாம். மனிதன்தனக்கு மிகவும் பிடித்த, உயிரினும் சிறந்ததாக மதிக்கும் பொருளை பிறருக்குக் கொடுக்க சம்மதிக்காமல் அதை நாசப்படுத்தி விடுவான். இது மனிதனுடைய எக்காலத்தும் மாறாத குணம். பாத்ஷா பாத்ஷாதான். ராஜ்யம் போகலாம், அதிகாரம் போகலாம், சேனையும் போகலாம். ஆனால் வாழ்நாள் முழுதும் அனுபவித்து வந்த தனது மனம் போல் நடக்கும் ஒரு குண முண்டே, அது ஒரு நாளில் அழிந்து விடாது. நாதிர்க்கு வைரம் கிடைக்காவிட்டால் அவன் டில்லியில் என்னென்ன செய்வானென்றுதெரியாது. அந்தோ! அதை நினைக்கும் பொழுதே மயிர்க்கூச்செரிகிறது. டில்லிக்கு அப் பயங்கர தினம் வராமல் ஆண்டவன் தான் காப்பாற்ற வேண்டும்.

இடையில் நாதிர் கேட்டான்: நான் உனதுபதிலை எதிர்பார்க்கிறேன். இது உன்னுடைய ஏமாற்றலல்லவா?

மந்திரி:— ஜஹாப்நாஹ், அந்த வைரம் பாத்ஷாஹ்வின் உயிரினும் சிறந்தது. அவர் அதை எப்பொழுதும் தன்னிடத்திலேயே வைத்திருக்கிறார்.

நாதிர்:— பொய் பேசாதே. வைரம் பாத்ஷாவுக்காக இருக்கிறது. பாத்ஷாஹ் வைரத்திற்காக இல்லை. பாத்ஷாவுக்கு வைரம் உயிரினும் அருமையானது என்பதின் அர்த்தமாவது:-அப்பொருள் அவருக்கு ரொம்பவும் இஷ்டமாகையால் நான் அதை வாங்கி வரமாட்டேன் என்பது தானில்லையா? பாத்ஷாவுக்கு இஷ்டம் இல்லாவிட்டால், கொடுக்காவிட்டால் என்ன செய்யவேண்டுமென்று எனக்குத் தெரியும். நேற்று பார்த்த அதே காட்சியை நீ மீண்டும் இன்று பார்க்க விரும்புகிறாய். அப்பா! எவ்வளவு இருதலைக் கொள்ளி எறும்பு போலாக்கும் பாட்டு!-என்று முதல் நாள் மந்திரியால் பாடப்பட்ட பாட்டை நினைத்துக்கொண்டு பாடினான்.

3

இந்த விஷயத்தை எவ்வாறு தீர்ப்பது என்று யோசித்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான் மந்திரி. பாத்ஷாஹ்கின் இருப்பிடத்திற்குப் போனான்: அவன் தனது கையில் அந்த வைரத்தை இவ்வளவுக்கும் மூல காரணமான வைரத்தை வைத்துக் கொண்டு ஆழ்ந்த யோசனையிலிருந்தான்.

பாத்ஷாவுக்கு இச்சமயம் வைரத்தின் கவலைதான். கொள்ளை அடிக்கப்படும் வழிப்போக்கனைப்போல் தனது கையினால் அவ்வைரத்தைக் கொடுக்க விரும்பவில்லை. கஜானாவில் இவ் வைரத்தைக் காணாது நாதிரின் கோபம் அவ்வளவு அதிகமாகுமென்று அவனுக்குத் தெரியும். ஆனால் எல்லாம் தெரிந்தும்கூட வைரத்தைத் தனது கையிலிருந்து கொடுக்க விரும்பவில்லை. நான் இதைக் கொடுக்க மாட்டேன். வேண்டுமானால் எனது உயிர் போகட்டும் என்று தனக்குள் தீர்மானித்தான். ஐயோ, எங்குஒளித்து வைப்பேன்? இவ்வளவு பெரிய அரண்மனையில் ஒரு ஊரையே மறைத்து வைக்கலாம். ஆனால் இச்சிறு பொருள் வைரத்தைமறைத்துவைக்கஇடமில்லை. இவ்வளவுபெரிய உலகத்தில்கூட அதை மறைக்கஇடமில்லை. எங்கேனும்யாரும் சந்தேகப்படாத இடத்தில் பத்திரமாக வைத்துவிட வேண்டும். நான் வைரத்தை எனது கூஜாவில் வைத்திருப்பேனென்று யாருக்குஞ் சந்தேகமுண்டாகுமா? ஹுக்காவின் உள்ளே வைத்துவிட்டால் யாருக்குத் தெரியும்?

இவ்வாறு யோசித்து அவன் வைரத்தை ஹுக்காவில் வைத்துவிட்டான். ஆனால் அவனுக்கு உடனே சந்தேகம் வந்துவிட்டது. ஏனென்றால் இவ்வளவு விலை உயர்ந்த நாதிர்ஷாஹ்வால் தேடிக்கொண்டிருக்கும் படியான வைரத்தை அப்பேர்ப்பட்ட

(15-ம் பக்கம் பார்க்க)


## தேவை

போட்டோ மோதிரக் கற்களுக்கு ஆர்டர்கள் வாங்க நாணயமும் பொறுப்பும் வாய்ந்த ஏஜண்டுகள் மலாயாவுக்கும், பர்மாவுக்கும் உடனே தேவை. விவரங்களுக்கு எழுதவும்.

M. V. & Co.,
KARAIKUDI, S. I. Ry.




லீச்டென்ஸ்டீன்

# இரயில் பாதையும் சிறையுமில்லாத தேசம்!

## 200 ஆண்டுகளாய்ச் சுதந்திர வாழ்க்கை

### ஜர்மெனிக்குப் பக்கத்திலேயே இருக்கின்றது

சென்ற 200 ஆண்டுகளில் எத்தனையோ போராட்டங்கள் ஐரோப்பாவில் நிகழ்ந்திருக்கின்றன. எத்தனையோ சாம்ராஜ்ய ஸ்தாபகர்கள் கிளம்பி தேசங்களை வேட்டையாடியிருக்கிறார்கள். பற்பல தேசங்கள் நிலைகுலைந்து சீரழிந்திருக்கின்றன. ஆனால் 200 வருஷமாக தேசங்களைக் கொள்ளையிடும் எவர் கண்ணிலும் படாமல், எப்போராட்டத்திலும் கலக்காமல், தப்பித்து வந்திருக்கிற ஒரு சிறு தேசம் ஜர்மெனிக்குப் பக்கத்திலேயே இருக்கிறது. ஆனால் ஹர் ஹிட்லரின் கண்ணுக்கும் தப்பித்துக்கொள்ள முடியுமா என்பது சந்தேகந்தான். வெகு சீக்கிரத்தில் அது ஜர்மெனியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டுவிடக்கூடும். அதனுடைய பெயர் லீச்டென்ஸ்டீன். பூலோகப் படத்தில் அதைக் கண்டுபிடிப்பது கடினம். கழுகுக் கண்களுடன் பார்த்தால்தான் அது இருக்கிற இடம் தெரியும். அதனுடைய பெயரை எழுதுவதற்குக்கூட அதனுடைய விஸ்தீரணம் போதாது.

ஜர்மென் பாஷையைப் பேசிக்கொண்டு, சுதந்திரத்துடன் வாழுகின்ற ஒரே தேசம் லீச்டென்ஸ்டீன் தான்!

லீச்டென்ஸ்டீன் 65 சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. வடக்கிலிருந்து தெற்கேயோ அல்லது கிழக்கிலிருந்து மேற்கேயோ, நடைக்குச் சளைக்காத ஒருவன் ஒரே நாளில் நடந்துபோகலாம். பார்லியமெண்டு சபையிலிருந்து ஒரு அம்பு விட்டால், அது இத்தேசத்தின் எல்லைக்கப்பால் போய் விழும். நல்ல வெளிச்சத்துடன் கூடிய நாளில் பார்த்தால், ஒரு கோடியிலிருந்து மற்றோர் கோடி தெரியும். கண்ணாடிகள் தேவையில்லை!

#### குஞ்சுகள் நடுவில் பெட்டைக்கோழி

வேடஸ் என்பதுதான் இச்சிறிய தேசத்துக்குப் பிரதான பட்டினம். சுமார் 1200 பேர் இதில் வசிக்கிறார்கள். சின்னஞ் சிறு குடிசைகள் நிறைந்த ஊர். ஒரு உணவுச்சாலையும் இரண்டொரு மாதாகோயிலும் இயற்கைக் காட்சிகளுடன் கூடிய ஒரு பள்ளத்தாக்கில் நெருக்கமாகவிருக்கும். சிறு பாறைகளை யொட்டியுள்ள ஒரு குன்றின்மீது இத்தேசத்தை ஆளுகின்றவருடைய மாளிகை, தீனி பொறுக்கிக் கொண்டிருக்கும் குஞ்சுகளுக்கு மத்தியில் இரை தேடுகின்ற ஒரு பெட்டைக்கோழிபோல, காட்சியளிக்கும்! சமீபகாலம் வரையில், ஆளுகிறவர் மாளிகையில்தான் வசிக்கிறார் என்பதை உணர்த்துகின்ற கொடி பறக்கவே யில்லை. அவர் நீண்டகாலம் வியன்னாவிலேயே இருந்துவிட்டார். ஒரு அதிசயம் என்னவென்றால், தேச மக்களுக்கு ஏதேனும் குறை ஏற்பட்டுவிட்டால், மன்னர் இப்படி வியன்னாவுக்குச் சென்று பெரும்பாலான காலத்தைக் கழிப்பது வழக்கம்! ஜோ கான்ஸ் மட்டும் இப்படி அடிக்கடி வியன்னாவுக்குப் போய்விடுவதற்கு ஒரு தக்க காரணத்தைக் காட்டிக்கொண்டிருந்தார். அவர் கிட்டத்தட்ட குருடு. கண் சிகிச்சை செய்துகொள்வதற்காக அவர் வாஸ்தவத்திலேயே அங்கு அடிக்கடி போகவேண்டியிருந்ததனால் அவர் தப்பித்துக்கொள்ளச் சாதகமாயிருந்தது. ஆனால் அவருக்குப் பின்னால் வந்த பிரான்ஸ் என்பவரும் அனேகமாய் வியன்னாவில்தான் குடியிருந்தார். அவருக்கு ஜோகான்ஸைப் போல ஒரு நல்ல காரணம் கிடைக்கவில்லை. அத்துடன் ஒரு பெரிய நெருக்கடி ஏற்பட்ட சமயத்தில், அவர் வியன்னாவை நிரந்தரமான வாசஸ்தலமாகவே கொண்டுவிட்டார்!

லீச்டென்ஸ்டீன் தேசத்தில் ஒரே ஒரு நெசவாலை இருக்கின்றது. விவசாயத் தொழிலும் சிறிது உண்டு. தொழில் முறையில் இவ்வளவுதான். கிராமவாசிகள் சிறு சிறு பண்ணைகளை வைத்துக்கொண்டு ஆடு மாடுகளை வளர்ப்பார்கள். பால், மோர், வெண்ணெய் ஆகியவைதான் கிராம உற்பத்திப் பொருள்கள். எனவே முக்கியமான உணவுப் பொருள்களும் இவைகள் தான்.

கிராமவாசிகள் மிக எளியமுறையில் வாழ்க்கை நடத்துகிறவர்கள். ஆதலின் தாம் சொற்ப பகுதியில் காலங் கழித்து, சிறிது சேமித்துவைத்து, அதை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வார்கள்.

லீச்டென்ஸ்டீன் மக்களுடைய ஜீவிய காலம் அதிகமானதாகவே யிருக்கிறது. ஜோகான்ஸ் 90 வது வயதில் தான், 72 வருஷ ஆட்சிக்குப்பின் 1930 ல் இறந்தார். உலகச் சரித்திரத்தில் நீண்டகால ஆட்சியில் இவருடைய ஆட்சிக்காலம் 2 வது ஸ்தான முடையது.

#### இரயில் கிடையாது

இத்தேசத்தில் இரயில்பாதை கிடையாது. வேண்டிய அவசியமு மில்லை. சைக்கிள்தான் மிகவும் அதிகம். சைக்கிள் பெருத்த தேசம் உலகத்திலேயே இதுதான். ஏகதேசங்களில்தான் மோட்டார் கார்களைப் பார்க்க முடியும். கார் ரிஜிஸ்டர் நம்பர் 500க்கு மேல் இருப்பதைப் பார்த்தவுடன் யாரும் பிரமித்துவிடுவார்கள். 500 கார்களுக்கு மேல் கண்ணுக்குத்தெரியாமல் எப்படி வைத்திருக்க முடியுமென்று நினைப்பர். மோட்டார் லைசென்ஸ் அதிகாரி 500 வது நம்பருக்கு மேல்தான் லைசென்ஸ் தர ஆரம்பிக்கின்றார்! தவிர இந்த மோட்டார் லைசென்ஸ் அதிகாரியேதான் போலீசு கமிஷனர், இராணுவ அதிகாரி, விளம்பர மந்திரி, அந்நிய நாட்டு மந்திரி!

#### சிறைச்சாலையே கிடையாது

இத் தேசத்தில் சிறைச்சாலையே கிடையாது. பெரும்பாலும் இத்தேசத்தினர் எக் குற்றத்தையும் செய்வது கிடையாது. நம்பிக்கை மோசம்தான் சாதாரணமாகக் காணப்படுகிற பெரிய குற்றம். ஜான் இளவரசர் அடிக்கடி வியன்னா சென்றுகொண்டிருந்தபடியால் அவருடைய மந்திரிகளிற் சிலர் பொதுப் பணத்தைக் கையாடுவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

சமீபத்தில் நேஷனல் பாங்கி டைரக்டர் ஒருவர் பாங்கிப் பணம் 60,000 பவுனை சூதாடித் தோற்றதனால் தேசத்தில் பெருங் கலவரம் ஏற்பட்டது. இத்தகைய செய்திகளைப் பிரமாதப்படுத்திக்கொண்டு இத்தேசத்தில் 2 சிறு பத்திரிகைகள் காலந் தள்ளுகின்றன.

இரண்டு பத்திரிகைகள் எதற்கு என்று கேட்கலாம். மக்கட்தொகை சிறிதாயினும், ஒரு பத்திரிகைக்கு இடமிருந்தால் போதாதா, இரண்டு பத்திரிகைகள் உண்டாவதற்கு!—லீச்டென்ஸ்டீன் தேசத்தில் இரண்டு கட்சிகள் உண்டு. ஆகவே இரண்டு பத்திரிகைகள் நடக்கின்றன; கிரமந்தானே?

#### அரசியல்

தேர்தல்களில் பெரும்பாலும் சொற்ப வித்தியாசந்தான் ஏற்படும். பியூகர் கட்சியென்றும், வாக்ஸ் கட்சியென்றும் இரு கட்சிகள் இருக்கின்றன. எல்லோர்க்கும் வாக்குரிமையுண்டு இவர்கள் 12 பிரதிநிதிகளை 4 வருஷங்களுக்கு ஒருமுறை பார்லிமெண்டுக்குத் தேர்ந்தனுப்புவார்கள். மன்னர் இன்னும் 3 பிரதிநிதிகளை நியமிப்பார். பிரதம மந்திரியை நிர்வாகி என்று சொல்லுவது வழக்கம். அவரையும் மன்னர்தான் நியமிப்பார். பிரதம மந்திரியின் பிரதான வேலை பார்லியமெண்டின் தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டுவருவதுதான்.

சரித்திர பூர்வமாய்ப் பார்த்தாலும் சரி, அரசியல் துறையில் பார்த்தாலும் சரி, லீச்டென்ஸ்டீன் ஒரு அதிசயமான தேசம். ஆதியில் இத்தேசம் இருபிரிவுகளாய்க் கருதப்பட்டு வந்தது. வேடஸ் என்றும் ஸ்கேல்லன் பர்க் என்றும் அப்பிரிவுகளுக்குப் பெயர். பொருளாதாரச் சீர்கேட்டால் ஸ்கெல்லன்பர்க் 1699ம் ஆண்டிலும், வேடஸ் 1713ம் ஆண்டிலும் விலைக்கு விற்கப்பட்டன. இரண்டையும் வாங்கினவர் ஒரு லீச்டென்ஸ்டீன்காரர்.

இக் குடும்பம் மிகப் புராதனமானது. 12 வது நூற்றாண்டில் சரித்திரத்திற் கூறப்பட்டுள்ளதாயினும் 1719ம் ஆண்டில்தான் மன்னர் குடும்பக் கௌரவம் கிடைத்தது. அந்த ஆண்டில் ரோமாபுரியின் சக்ரவர்த்தி வேடஸ், ஸ்கெல்லன்பர்க் ஆகியஇரண்டையும் 'லீச்டென்ஸ்டீன்' என்று ஆக்கினர். இப்படியாக, 1806ம் ஆண்டு வரையில் தள்ளாடிக் கொண்டிருந்த ரோம சாம்ராஜ்யம் கடைசியாகச் சிதைந்து போய்விடவே, ஜர்மென் ஐக்கியத்தில் ஒரு சுதந்திர தேசமாக மாறியது.

1866-ம் ஆண்டில், சடோவா யுத்தத்துக்குப்பின், பிரஷ்யர்கள் ஆஸ்திரியர்களை வென்று ஜர்மென் ஐக்கியத்தை முறித்தனர். ஜான் மன்னருக்கு அப்போது 26 வயது. ஆட்சிக்கு வந்து 8-வது வருஷம். அவர் பிஸ்மார்க்கின் ஞாபக மறதியை ஆதரவாய்க்கொண்டு, தம் தேசத்தின் சுதந்திரத்தை மேலும் பலப்படுத்திக் கொண்டுவிட்டார். என்றாலும் தேசம் மிகச் சிறிது; மேலும் எளிமையானது. எனவே, ஆஸ்ட்ரியாவின் ஆதரவு அதற்கு அத்தியாவசியமானதாயிருந்தது. தபால், நாணயம் ஆகிய இரண்டுக்கும் அதனுடன்சேரவேண்டியேற்பட்டு, கடைசியாக ஆஸ்ட்ரிய கஸ்டம்ஸ் யூனியனில் சேர்ந்திருக்கும்படி ஆயிற்று.

உலக யுத்தம் லீச்டென்ஸ்டீனைப் பாதிக்கவில்லை. ஆயினும் ஆஸ்ட்ரியா ஹங்கேரி வீழ்ந்ததும், லீச்டென்ஸ்டீன் சுவிட்சர்லாந்தின் கஸ்டம்ஸ் யூனியனுக்கு மாறும்படி ஏற்பட்டுவிட்டது.

எனவே, லீச்டென்ஸ்டீன் தேசத்தில் நடமாடுவது சுவிட்சர்லாந்தின் பிராங்க் நாணயந்தான். தபால், தந்தி இலாகாவை நிர்வகிப்பதும் ஸ்விட்சர்லாந்து!

லீச்டென்ஸ்டீன் வருடாந்திர வருமானம் 4,00,000 (சுவிட்சர்லாந்து தேசத்து) பிராங்குகள் ஆகும்.

மிகச்சிறிய தேசமாகிய லீச்டென்ஸ்டீன் 200 ஆண்டுகளைக் கழித்துவிட்டது. பக்கத்திலுள்ள தேசங்கள் எத்தனையோ அழிந்து போயிருக்கின்றன. எத்தனையோ சாம்ராஜ்யங்கள் பெயர் தெரியாமற் போய்விட்டன. ஆனால் இதுமட்டும் தன் கௌரவத்தையும் சுதந்திரத்தையும் காப்பாற்றிக் கொண்டே வந்துவிட்டது. தன்னுடைய விசேஷச் சாமர்த்தியத்தால் இவ்வாறு வாழ்ந்திருப்பதாகச் சொல்ல முடியாது. எக்காரணமுமில்லை. அகல் மாத்தாகவோ, பிறர் பொருட்படுவதற்கு இடமுண்டாகவில்லை. அவ்வளவுதான்.

ஹிட்லர் இதை அபகரிப்பாரா?


## நகரத்தார் மில்க் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட்

தேவகோட்டை

நம்மவர்களாகச் சேர்ந்து ஷெ பால் கம்பெனியை ஆரம்பித்து சொந்தத்தில் பால் பண்ணை வைத்து சென்ற ஒரு வருட காலத்திற்கு மேலாகவே இக் கம்பெனி நடந்து வருகிறது. சுகாதார முறைப்படி குடும்பங்களுக்கு பசும்பாலும், கிளப்பு விசேஷகால ஆர்டர்களுக்கு, தனி முறையில் எருமைப் பாலும் சப்ளை செய்து வருகிறோம்.

இன்னும் பருத்தி விதை, கடலைப் புண்ணாக்கு, உளுந்தங் குறுணை, துவரங் குறுணை, து. பருப்பு, உ. பருப்பு, ப. அரிசி, பு. அரிசி, வகையருச் சாமான்கள் மொத்தமாகவும் மூட்டையாகவும் விலை சகாயமாக கொடுத்து வருகிறோம்.

காரைக்குடியிலும் ஒரு பிராஞ்சு ஏற்படுத்த தீவிர முயற்சிகள் நடந்து வருகின்றன. ஷேர்களை மேலும் சேர்ப்பதற்கு கல்லுப்பட்டி சுப. லெ. தெய்வாயன் செட்டியார் அவர்கள் மலாய்நாடு சென்றிருக்கிறார்கள்.

நம்மவர்களெல்லோரும் இக்கம்பெனியில் பங்கெடுத்துக்கொண்டு கம்பெனியை ஆதரிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

காரைக்குடி நகரசபையின் சாதாரணக் கூட்டமொன்று 27—5—39உ மாலை 5 மணிக்கு சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் நடைபெற்றது. தலைவர் உள்பட 9 அங்கத்தினர்கள் வந்திருந்தனர்.

பால் பண்ணை

புல் பயிர் செய்வதற்கும், ஒரு பிரதிரூப பால் பண்ணை நடத்தவும், குடிகாத்தான்பட்டி கண்மாய் புறவாயில் 3-84 ஏக்கர் விஸ்தீர்ணமுள்ள புறம்போக்கு நிலத்தை முனிசிபாலிடிக்குப் பராதினப்படுத்திக்கொடுக்க ரெவினியூ இலாகாவைக் கேட்டுக்கொள்வதெனத் தீர்மானிக்கப்பட்டது.

தேகப் பயிற்சி ரிபோர்ட்

17—4—39உ முதல் 29—4—39உ வரை காரைக்குடியில் ஆரம்பக் கல்விப் பள்ளிக்கூடங்களின் ஆசிரியர்களுக்காக நடைபெற்ற விசேஷ தேகப்பயிற்சி சம்பந்தமாய் சீனியர் தேகப்பயிற்சி டைரக்டரின் ரிப்போர்ட்டு ரெக்கார்டு செய்யப்பட்டது.

கால் நடைச் சந்தை

இலுப்பைக்குடி லிமிட்டிலுள்ள தமக்குப் பாத்தியமான இடத்தில் ஒரு கால் நடைச் சந்தை நடத்த லைசென்ஸ் கோரியுள்ள ஸ்ரீ பி. ஆர். வ. எம். மெய்யப்பனம்பலத்தின் 9-5-39உ மனுவை, ஷை ஜாகாவானது முனிசிபல் லிமிட்டிற்குள் இல்லை என்னும் காரணத்தால் தள்ளுபடி செய்யப்பட்டது.

எதிர்வாதத்திற்கு அனுமதி

8-வது வார்டு, டி. எஸ். நிர் 120 ன் டிமார்கேஷனைப்பற்றி காரைக்குடி ஸ்ரீ ந. சி. ராமச்சந்திரன் சேர்வையும் மற்றவர்களும் முனிசிபல் கவுன்சில் பேரில் தொடர்ந்திருக்கிற தேவகோட்டை சப் கோர்ட் ஒ. எஸ். 60/38 நிர். ரூட்டை எதிர்வாதம் செய்ய அனுமதிக்கப்பட்டது.

தொழில் வரி அப்பீல்

ஸ்ரீ சித. நா. ராம. நாராயணன் செட்டியாருடைய தொழில் வரி அப்பீல் காலங்கடந்து வந்ததால் நிராகரிக்கப்பட்டது.

(1) ஸ்ரீ வெ. மெ. ராம,சு. ராமசாமி செட்டியாரின் தொழில் வரி அப்பீலில் மனுதார் கூறும் கம்ளையிண்டுகளை விசாரித்து கவுன்சிலுக்கு அறிவிக்கும்படி தீர்மானிக்கப்பட்டது.

குத்தகை

6வது வார்டு டி. எஸ். நிர். 119-ன் ஒருபாகத்தை ஸ்ரீ எஸ்.வடிவேல் பிள்ளை என்பவருக்கு கலெக்டர் அனுமதியின் பேரில் இடத்தை ஒரு வருஷத்திற்குக் குத்தகைக்கு வருஷத்துக்கு ரூ. 5. வீதம் வாடகைக்குவிட ஒப்புக்கொள்ளப்பட்டது.

அப்பீல்

(2) 16வது வார்டு டி.எஸ். 253 நிர். சொத்தின் முந்திய வரி ரூ. 14-9-0 ஸ்திரம் செய்துள்ள கமிஷனரின் உத்தரவின்பேரில் வந்துள்ள ஸ்ரீ சித. சிவ. சிதம்பரம் செட்டியார் அப்பீல் செய்வதற்குள்ள வரியைச் செலுத்தவில்லையாதலால் அப்பீல் ஏற்றுக்கொள்ளுவதற்கில்லை என அங்கீகரிக்கப்பட்டது.

ரீபண்டு

வரி விதிப்பின் பேரில் செலுத்த வேண்டியதைக் காட்டிலும் உபரியாகத் தம்மிடம் அணா 10 வசூலிக்கப்படுகிறதென்றும் அதை வாபஸ்தர வேண்டுமென்றும் கோரிய ஸ்ரீமதி அலமேலு அம்மாளின் மனுவின் பிரகாரம் பணத்தை ரீபண்டு பண்ண சாங்ஷன் செய்யப்பட்டது.

# காரைக்குடி நகரசபை

(நமது நிருபர்)

முனிசிபல் பஸ் ஸ்டாண்டு

முனிசிபல் பஸ் ஸ்டாண்டு ஒன்று திறப்பது சம்பந்தமான பேப்பர்களும் காரைக்குடி தனலெக்ஷ்மி அண்டு கம்பெனியாரால் ஒரு பெட்ரோல் பங்க் கட்டுவதற்கு வியாழக்கிழமை சந்தைப் பேட்டை இடத்திற்கு லைசென்ஸ் அளிக்கப் போவதாகத் தெரிவிக்கும் இராமனதபுரம் ஜில்லா கலெக்டரின் லெட்டரும் ரிக்கார்டு செய்யப்பட்டது.

லோகோபகாரி

செக்காலை கோகலே வாசகசாலைக்கு மட்டும் 'லோகோபகாரி' என்ற வாரப் பத்திரிகை வரவழைக்கலாம் எனத் தீர்மானிக்கப்பட்டது.

வடிகால் திட்டம்

வடிகால் திட்டம் சம்பந்தமாக கமிஷனரின் நோட்டு அங்கீகரிக்கப்பட்டதுடன் அரசாங்கத்தை இது விஷயத்தில் கருணைகாட்டி விரைவில் அனுமதி தந்து நகரத்தின் தேவையைப் பூர்த்தி செய்யும்படி கவுன்சில் கேட்டுக்கொள்ளுகிறது.

ரிக்கார்டு ரூமுக்குப் பர்னிசர் சப்ளை செய்ய ரூ 125-ம் சிவன்கோவில் முனிசிபல் எலிமெண்டரிபாடசாலையில் சடுகுடு கோர்ட்டுக்கு மணல் சப்ளை செய்ய ரூ27-ம் தெற்குவல்லம்பர்தெரு கே பி.எம் முனிசிபல்பார்க்குக்குச்செங்கல், மாட்டுச்சாணம், மணல் சப்ளை செய்ய ரூ82-ம் 4-வது வார்டு காட்டுத் தலைவாசல் புதிய பள்ளிக்கூடத்திற்குப் பர்னிச்சர் சப்ளை செய்ய ரூ 215-ம் சாங்ஷன் செய்யப்பட்டது.

கே. பி. எம். பார்க்குக்கு செடிகள் சப்ளை செய்த வகையில் சைதாப் பேட்டை பாபாடாஜ் நர்சரிக்கு ரூ 64—4—0 ம், டவுன் படத்தை ஒட்டுவதற்கு துணியின் பேரில் குமரன் ஆபீஸுக்கு சார்ஜ் ரூ 3—0—0 ம் எஸ். எம். வ. ஆர் பார்க்குக்கு ரிவைஸ்டு எஸ்டிமேட் ரூ 420 ம் சாங்ஷன் செய்யப்பட்டது.

கிளாக் டவர்

கல்லுக்கட்டியில் கிளாக் டவர் கட்டுவதற்கு எஸ்டிமேட் ரேட்டிலிருந்து 2 பர்செண்ட் குறைவாகக் கண்டிராக்டர் ஸ்ரீ எஸ். நாகலிங்கம் பிள்ளையுடன் செய்துகொண்ட ஒப்பந்தம் ஒப்புக்கொள்ளப்பட்டது.

1939-40 ம் வருடத்திற்கு செக்காலை ரோட்டிலுள்ள ஐந்து விளக்குகள் சந்திப்பில் சர்பேஸ் டிரஸ்ஸிங் செய்ய ரூ 75 ம் மதுரை ரோட்டிலிருந்து கழனிவாசல் ரோட்டை சர்பேஸ் டிரஸ்ஸிங் செய்ய ரூ 3000 ம் முனிசிபல் ஆபீஸிற்குச் சமீபம் மைல் ஸ்டோனிலிருந்து தேவகோட்டைரோடு 1-6 பர்லாங்கு வரை முதல் கோட்டுக்கு மேல் ஸ்பிரே மாக்ஸிஞல் சர்பேஸ் பெயிண்டிங் செய்ய ரூ 2000 ம் பெருமாள் கோவில் கிழக்குத் தெரு புது மார்க்கெட்ரோடு சந்திப்பிலிருந்து தேவகோட்டை ரஸ்தா சந்திப்பு வரை ஸ்பிரே மாக்ஸிஞல் சர்பேஸ் பெயிண்டிங் செய்ய ரூ 450-ம் கீழக் கொரட்டியார் தெரு சிவன்கோவில் சந்நிதித் தெரு, அம்மன் சந்நிதித் தெரு சந்திப்பிலிருந்து சி. மெ. தெரு தொடர்ச்சியை ஸ்பிரே மாக்ஸிஞல் சர்பேஸ் பெயின்டிங் செய்ய ரூ 800-ம் ரயில்வே ஸ்டேஷன் ரோடு நல்லயனுசாரித் தெருவிலிருந்து முனிசிபல் லிமிட் 7 பர்லாங்குகள் வரை ஸ்பிரே மாக்ஸிஞல் சர்பேஸ் பெயின்ட்டிங் செய்ய ரூ. 2250 ம் கீழ ஊரணி தென் கரை ஸ்பிரே மாக்ஸிஞல் சர்பேஸ் பெயின்டிங் செய்ய ரூ. 375 ம் மெ. மெ. தெரு கல்லுக்கட்டி தெற்குத் தெருவிலிருந்து சு. ராம. தெரு வரை சர்பேஸ் பெயின்டிங் இரண்டாவது கோட் அடிக்க ரூ. 500ம் சி. மெ. தெரு புது மார்க்கெட் ரோடு சந்திப்பிலிருந்து கீழக்கொரட்டியார்தெரு சந்திப்புவரை சர்பேஸ் பெயின்டிங் இரண்டாவது கோட் அடிக்க ரூ. 600ம் செக்காலை ரோடு ஐந்து விளக்கிலிருந்து முதல் மைல் ஸ்டோன் வரை சர்பேஸ் பெயின்டிங் இரண்டாவது கோட் அடிக்க ரூ. 1500ம் கல்லுக்கட்டி சுற்றிலும் ஐந்தாம் ஜார்ஜ் ரோடு, கீழச் சத்திரம், அம்மன் சன்னதி சு. ராம. தெரு இந்த ஷெல் வீட்ரோடுகளுக்கு மேல் ஸீலிங் கோட் அடிக்க ரூ. 2800ம் சிவன் கோவில் தெரு கிழக் கொரட்டியார் தெரு முத்தாளம்மன் ஊரணி கிழக்கு மேற்குத் தெருக்கள்—இவைகளுக்கு ரீமெட்டலிங் செய்ய ரூ. 825 ம் 7-வது வார்டிலுள்ள சோழவளத்தான் அம்பலம் தெருவை கிராவலிங் செய்ய ரூ. 85ம் 5-வது வார்டிலுள்ள தெருக்களையும் சந்துகளையும் கிராவலிங் செய்ய ரூ. 750ம் கீழக் கொரட்டியார் தெரு சந்திப்பிலிருந்து நல்லயனுசாரித் தெரு வரை லாட்ரைட் மெட்டலால்மெட்டலிங் செய்ய ரூ. 210ம் 16-வது வார்டிலுள்ள நாகலிங்கம் பிள்ளை தெருவை லாட்ரைட் மெட்டலால் மெட்டலிங் செய்ய ரூ. 225ம் கல்வெர்ட்டிலிருந்து அம்மன் சந்நதித் தெரு வரை, கிணத்தடிக் காளியம்மன் கோவில் தெருவை லாட்ரைட் மெட்டலால் மெட்டலிங் செய்ய ரூ220ம் புது மார்கெட் ரோடிலிருந்து கடைசி வரை 15-வது வார்டிலுள்ள ராமன் செட்டியார் தெருவை லாட்ரைட் மெட்டலால் மெட்டலிங் செய்ய ரூ. 220ம் தெற்கு வல்லம்பர் தெரு பாலம் வரைக்கும் லாட்ரைட் மெட்டலால் மெட்டலிங் செய்ய ரூ. 310ம் நாகநாதபுரம் பெருமாள் கோவில் தெற்குத் தெருவிலிருந்து ஸ்ரீ செல்லப்ப செட்டியார் தெருவை லாட்ரைட் மெட்டலால் மெட்டலிங் செய்ய ரூ. 490ம் முத்துப்பட்டணம் முத்துராமன் செட்டியார் தெரு முத்துரணி கீழ்க்கரை செக்காலை ரோடு வரை லாட்ரைட் ஜெல்லியினுல் மெட்டலிங் செய்ய ரூ. 720ம் அக்குவயர் செய்துள்ள தெருக்களின் பாகங்களை கிரானைட்டினுல் மெட்டலிங் செய்யவும் சாக்கடைகளை ரிப்பேர் செய்யவும் ரூ. 720ம் லாட்ரைட் மெட்டல்டு ரோடுகளையும் கிரானைட் மெட்டல்டு ரோடுகளையும் மெய்ன்டெய்ன் செய்ய ரூ. 200ம் 15-வது வார்டிலுள்ள தெருக்களையும் சந்துகளையும் கிராவலிங் செய்ய ரூ. 900ம் 6-வது வார்டிலுள்ள தெருக்களை கிராவலிங் செய்ய ரூ. 325ம் சாங்ஷன் செய்யப்பட்டன.

ஜில்லா கல்விக் கவுன்சில்களை எடுத்துவிடுவது சம்பந்தமாய் 1939ம் வருஷம் ஆரம்பக் கல்விச் சட்டத்திருத்தம் 1—6—39ந் தேதியிலிருந்து அமுலுக்கு வருமென்று தெரிவித்துள்ள 9—5—1939உ ய சர்க்கார் உத்தரவு ரிக்கார்டு செய்யப்பட்டது.


## இண்டோ லங்கா லைப் அஷ்யூரன்ஸ்
### கம்பெனி லிமிடெட்

(ஸ்தாபிதம் 1923) :: :: தலைமை ஆபீஸ், மதராஸ்

செலாவணியில் ரூ. 18,00,000
கொடுக்கப்பட்ட உரிமைத் தொகை ரூ. 4,00,000

கவர்மெண்டு சாமீன் செலுத்தப்பட்டுள்ளது.
தக்க சமயத்தில் உதவுகிறது.
மொத்தத் தொகையாய் கிடைக்கக் கூடியது.
மாதப் பிரிமியம் ரூ. 1—0—0 முதல் ரூ. 8—0—0 வரை தான்.
எல்லோராலும் இன்ஷுர் செய்யக்கூடிய இந்தியக் கம்பெனி.
ஏழைகளுக்கேற்றது.
ஏழைகளும், செல்வந்தர்களும் பிரிமியம் சுலபமாய்ச் செலுத்தக்கூடியது.
கவர்மெண்டு சாமீன் செலுத்தப்பட்டுள்ளது.

இதுவரையும் இக் கம்பெனி பாலிஸிதார்களுக்கு 100-க்கு 50 வீதம் தொடங்கி 100-க்கு 100 வரையும் லாபத்துடன் தொகை கொடுத்துள்ளது. இது போன்ற லாபத்தொகை கொடுக்கும் கம்பெனிக்குள் தலைசிறந்து விளங்குவது ஐ. எல். எல். ஏ. கம்பெனி ஒன்றே!

இதில் இன்ஷியூர் செய்து லாபம் அடையுங்கள்

புதுக்கோட்டை ஸ்டேட்டிலும், இராமனதபுரம் ஜில்லாவிலும் உள்ள அடியிற்கண்ட ஊர்களுக்கு பொறுப்பும் நாணயமும் வாய்ந்த சப் ஏஜண்டுகள் தேவை. கமிஷன் அல்லது சம்பளத்தில் வேலை செய்யலாம்.

கோனபட்டு, நச்சாந்துபட்டி, ஆ. தெக்கூர், குருவிக்கொண்டான்பட்டி, ஆவினிப்பட்டி.
கண்டனூர், கானடுகாத்தான், ஷண்முகனதபுரம், கல்லல், நாட்டரசன்கோட்டை, ஆத்தங்குடி

எல்லா விபரத்துக்கும் நேரிலும் லெட்டர் மூலமாயும் தெரிந்து கொள்ளலாம்

MR. AL. சொக்கலிங்கம் செட்டியார்,
சீப் ஏஜண்டு ஆபீஸ்,
I. L. L. A. Co., Ltd.
சொக்கலிங்கம் புதூர், (Via) ஆத்தங்குடி,
இராமனதபுரம் ஜில்லா.




# இமயமலையில் சிவபெருமானின் பனிச்சிலை!

[இமயமலையில், உறைகிற பனிக்கட்டி சிவபிரானின் உருவச் சிலையாய் உருப்பெறுவது ஒரு அதிசயம். 13 நூற்றுண்டுகட்கு முன்னம்,ஸ்ரீ சங்கரரால் ஸ்தாபிக்கப்பெற்ற இந்த க்ஷேத்திரத்துக்குப் பல்லாயிரக்கணக்கான மக்கள்-இந்துக்களும் இந்துக்கள் அல்லாதவர்களும்-யாத்திரை செல்லுகிறார்கள். ஜூன் மாத முதல் ஆகஸ்ட் வரை யாத்திரைக் கும்பல் அதிகமாயிருக்கும். யாத்திரைப் பாதையின் போக்கைப் படிக்கும்போதே அங்கு போக வேண்டுமென்ற ஆவலுண்டாவது இயற்கை.]

★

அமரநாத் குகை மிகப் பிரபல்யமானது. அங்கே பல்லாயிரக்கணக்கான யாத்ரீகர் வருடந்தோறும் சென்று வருகிறார்கள். அது ஹிந்துக்களுக்குப் புண்ணிய ஸ்தலம்.

அமரநாத் குகை காஷ்மீரத்தில் இருக்கிறது. மிகக் கடினமான பாதையைக் கடந்து சென்ற பின்னர்தான் அங்கே போக முடியும். அந்த க்ஷேத்திரத்தை ஸ்ரீ சங்கராச்சாரியார் 13 நூற்றுண்டுகளுக்கு முன்னர் ஸ்தாபித்தார். ஸ்ரீ சங்கரர், இந்தியாவின் எல்லைகள் நான்கிலும் நான்கு புண்ணிய ஸ்தலங்களை நிறுவினர். அப்படி நிறுவிய நான்கில் அமரநாத் குகையும் ஒன்று.

அடர்ந்த பனிமலைகளுக்கு நடுவிலே அமரநாத் க்ஷேத்திரம் இடம் பெற்றிருக்கிறது. அதற்குப் போகின்ற வழியோ செங்குத்தான மலைகளில் செல்லுகின்றது. காட்டுப் பாதை. கடினமான பிரயாணத்தைப் பொருட்படுத்தாமல்தான் அமரநாத்துக்குப் போய்ச்சேரவேண்டும். வழி நெடுக, பல மைல்களுக்குப் பனி நிறைந்திருக்கும். வழியைப் பார்க்கும்போதே பிரம்மித்துவிடுவோம். என்றாலும் ஒரு உத்சாகத்தால், அமரநாத்துக்குப் போய்விடவேண்டும் என்கிற ஆசையால், பனி நிறைந்த பாதையைக்கண்டு யாத்ரீகர்கள் திகைப்பதுண்டாயினும், கடக்கப் பின்வாங்குவதில்லை.

இந்த க்ஷேத்திரத்திலுள்ள சிவபெருமானின் சிலை பனியால் ஆக்கப்பட்டது. பனி உறைந்து பனிக்கட்டிச் சிலையாகிறது!

நாளுக்கு நாள் இப்பனிக்கட்டிச் சிலையின் உருவம் பருத்தும் சிறுத்தும் காணப்படும். இம் மாறுபாட்டுக்குக் காரணம், குகையிலுள்ள சீதோஷ்ண வேறுபாடுதான். குகையின் சீதோஷ்ணம், ஒரு வருஷத்தில் பல மாதங்களுக்குத், தண்ணீர் உறைவதற்கு வேண்டிய குளிர்ச்சியைக்காட்டிலும் அதிகமாகவேயிருக்கும். எனவே, எக்காலத்தும் சிவபெருமான் பனிக்கட்டிச் சிலையில் பருத்தும் சிறுத்தும் காட்சியளித்த வண்ணமாகவே யிருப்பார்!

யாத்திரைக் காலம்

ஆகஸ்ட் மாதத்தில்தான் யாத்ரீகர்கள் புறப்படுவது வழக்கம். காஷ்மீர் சமஸ்தான ரோடு மராமத்து இலாகாவைச் சேர்ந்தவர்கள் இதற்கு முன்பு பனிமூடிய ரோடுகளைச் செப்பனிட்டு வைத்திருப்பார்கள். மற்றும் ஓடைகளின் குறுக்கே போடப் பெற்றிருக்கும் பாலங்கள் யாவும் அடித்துக்கொண்டு போகப்பட்டிருக்கும். அவற்றையும் ஒப்பனை செய்திருப்பார்கள்.

பள்ளத்தாக்குகளுக்கும் மலைகளுக்கும் நடுவே பாதை செல்லுகின்றது. பனிச்சிலை என்பது ஒரு அதிசயமாதலால் ஹிந்துக்களல்லாதவர்களும் வருஷா வருஷம் புதிது புதிதாய் வருவர். பாதைதான் கடினமே ஒழிய நெடுந்தூரம் போக வேண்டியிராததை உத்தேசித்துச் சகலரும் இங்கு செல்ல ஆசைப்படுவது ஒரு ஆச்சரியமல்ல.

பகால்கம் என்ற ஒருசிறு கிராமத்திலிருந்துதான் புறப்படவேண்டும். இது ஸ்ரீநகருக்குக் கிழக்கே யிருக்கிறது. ஸ்ரீநகரிலிருந்து பிரயாணிகளும் யாத்ரீகர்களும் மோட்டார் பஸ்களில் வருவார்கள். மராமத்திலாகா ரோடுகளைச் செப்பனிடுவதற்கு முன்பு, அதாவது, ஜூன் ஜூலை மாதங்களில்கூட சிலர் அமர்நாத்துக்குப் போவதுண்டு. சிறிது அபாயகரமானதுதான். ஆனல் போய்விடலாம்.

பகால்கம் என்ற இடத்திலிருந்து சந்தன்வாரி போகவேண்டும். இது சமுத்திர மட்டத்திற்கு 9000 அடி உயரத்திலிருக்கிறது. இந்த 8 மைல் தூரம் ஷீஷ்நாக் நதியை ஒட்டியே செல்லுகின்றது. இந்நதி ஷீஷ்நாக் ஏரியிலிருந்து புறப்பட்டு, ஒரு ஓசையுடன் பகால்கம் போய் இன்னோர் சிறு நதியில் சேரும்.

காஷ்மீரத்திலுள்ள இரண்டு மாடிகளையுடைய வீடுகளும், இயற்கைக் காட்சிகளும்,ஓங்கிவளர்ந்த மரங்களும் வெகுதூரத்தில் நிற்கும் மலைகளும் பச்சை நெற்பயிர்களும் செடிகளும் கொடிகளும் கண்களுக்கு மிக ரம்மியமாயிருக்கும்.

பகால்கம் கிராமத்தைவிட்டு விடியற்காலை புறப்பட்டால் சந்தன்வாரிக்கு உச்சிக்காலத்திற்போய்ச் சேரலாம். சிலர் நடந்தே போவார்கள். மற்றுஞ் சிலர் குதிரைகள் அல்லது கோவேரிக் கழுதைகள் மீது ஏறிச் செல்வர். போவது கடினந்தான். மிக மிக உயரத்தில் ஏறவேண்டியிருக்கும். பிறகு ஏறின் தூரம் இறங்க வேண்டி வரும்! எனவே, குதிரைச் சவாரியில் நல்ல பழக்கமில்லாதவர்கள், குதிரை மீது ஏறிச் சென்றாலும் ஒன்றுதான், நடந்துபோனாலும் ஒன்றுதான்.

பனிக்கட்டிப் பாலம்!

4, 5 அடிக் கனமுள்ள பனிப்பாலம் ஒன்று இயற்கையாகவே அமைந்திருக்கிறது. இந்த இயற்கைப் பனிப்பாலம் இல்லாவிடில் ஜனங்களோ மிருகங்களோ, விரைந்து செல்லும் ஷீஷ்நாக் நதியைக் கடந்து செல்லவே முடியாது. சந்தன்வாரிக் கப்பால், வழி சிறிது இடதுபுறமாய் ஒருக்கணித்துச் செல்லும்.

இரண்டுமைல் தூரம் ஒரேயடியாக இங்கு ஏறவேண்டும். பாறைகள் மீதும், ஆடுகிற கற்கள்மீதும் போக வேண்டும். கொடுமையான வெய்யில் அடிக்கவும்கூடும். இயற்கைக் காட்சிகளும் இருக்கமாட்டா. 2மணி நேரம் ஏறியபின் குன்றின் சிகரத்தை யடைவோம். கோடைக்காலம் ஆரம்பித்துவிட்டால், ஆடு மாடு மேய்ப்பவர்கள் தங்களுடைய மந்தைகளை ஓட்டிக்கொண்டு இங்கு மேய்ச்சலுக்கு வந்துவிடுவார்கள். ஒரு மாதம் அல்லது 2மாதங்கள் அவர்கள் இங்கேயேதங்கியிருப்பார்கள்.

இதற்கப்பால் பாதை வளைந்து வளைந்து செல்லும். கீழ்ப்பாங்கான 'பிஸ்ஸு காட்டி' எனும் இடத்தை அடைவோம்.இது ஒரு பள்ளத்தாக்கு. யாத்திரைக் காலத்தின்போது ஏராளமான 'கொசு'போன்ற அலுங்குகள் வந்து பிடுங்கும். அடர்ந்த சிறு மரஞ் செடிகள் நிறைந்திருக்கும். அதிகக் குளிர் இருக்காது.

ஷீஷ்நாக் ஏரி

இன்னும் 3மணி நேரம் பிரயாணம் செய்தால், ஷீஷ்நாக் ஏரிக்கு வருவோம். காஷ்மீர் பள்ளத்தாக்கில் இதுவே ரம்மியமான இயற்கையின் பத்தைத் தருவதாகும். இது தூரத்திலிருந்து பார்ப்பதற்கே மிகக் குளிர்ச்சியைத் தரும். மூன்று புறங்களிலும் மலையுள்ள பள்ளத்தாக்கின் நடுவிலே அமைந்துள்ள அழகான ஏரி இது. இம்மலைகள் மீது ஓயாத பனி நிறைந்திருப்பதால், ஏரித்தண்ணீரில், மலைகளிலிருந்து நீரோடைகளும் வந்துவிழும். ஏரித்தண்ணீர் அமைதியுடனிருக்க, மலை நீர்த்தாரைகள் மிகுந்த சப்தமிட்டுக்கொண்டே வந்து, வெடிகுண்டுச் சப்தம்போல கோஷித்து ஏரி நீரில் கலக்கும். காற்றடிக்கும் திசை மாறுகிற போதெல்லாம், இச்சப்தம் கிளம்புகிற இடமும் மாறுமாதலால், ஒருசமயம் இடது காது செவிடுபடும் போலிருக்கும். மறு சமயம் வலது காதைத் துளைக்கும்.

ஷீஷ்நாக் ஏரித்தண்ணீர் நல்ல நீல நிறமுடையது. அதனைச் சுற்றி நாற்புறமும் வெள்ளைப் பனி பளிச்சென்று மின்னிக்கொண்டிருக்கும். ஏரிக்குப் போக்குமடை ஒன்றே ஒன்றுதான். அது ஷீஷ்நாக்நதியில் தொண்டுபோய் விடும்.

சமுத்திர மட்டத்துக்கு மேல் 10,000 அடி உயரத்தில் இவ் ஏரி இருக்கிறது. வருஷமுழுதும் குளிர்ந்த காற்றடித்துக் கொண்டிருக்கும். ஷீஷ்நாக் ஏரியை நோக்கியிருக்கும் விடுதிகள் 'வாயுஜான்' என்ற இடத்தில் உள்ளவை.

அதிகமாய்க் குளிர் தாங்க மாட்டாதவர்களுக்குத்தான் இது ஒரு மாதிரியாக இருக்குமே ஒழிய, எல்லோருமே இந்த ஏரியைச் சுற்றி உலாவத்தான் பிரியப்படுவர். மலை ஓடைகளிடும் சிறு ஓசையைச் செவி கொடுத்துக் கேட்க விரும்புவர். இச் சிற்றோசை திடீரென வேட்டுச் சப்தம்போலகேட்பதைக்கண்டு வியப்பர். எங்கும் வெள்ளைப்பனி. நடுவிலே நீலநிற ஏரி!

ஷீஷ்நாக் ஏரிக்கு வந்ததும் சூரியன் அஸ்தமித்து விடும். பிரயாணிகளும் யாத்ரீகர்களும் இராப் பொழுதை இங்கு கழிப்பர்.

பஞ்ச தரணி

காலையில் வாயுஜானை விட்டுப் போனால் அடுத்தாற்போல பஞ்சதரணி அல்லது 5 நதிகள் சந்திக்குமிடத்துக்கு வருவோம். ஹிந்துக்களுக்கு இது ஒரு பெரிய க்ஷேத்திரம். இங்கு வந்ததும் யாத்ரீகர்கள் மீண்டும் குகைக்குப் புறப்படுமுன் இத் தண்ணீரில் ஒரு முழுக்குப்போடத் தவற மாட்டார்கள்.

பாதை சமுத்திர மட்டத்துக்கு மேல் 14,000 அடி மேலே சென்று, பனி நிறைந்த பள்ளத்தாக்குகளில் மறைந்து கிடக்கும். ஆகஸ்ட் மாதத்தில், மலை யுச்சியில் உறைந்த பனிக்கட்டி கரைந்துவிடும். ஆதலின், மே ஜூன் மாதங்களில் போகிறவர்கள் தான் பல மைல்கள் தூரம் பனியில் நடக்கவேண்டி யிருக்குமே ஒழிய, ஆகஸ்ட் மாத யாத்ரீகர்களுக்கு அக் கஷ்டமிராது.

வாயுஜானிலிருந்து 5 மைல் தூரம் ஜாக்கிரதையாகத்தான் போக வேண்டும். பனிப்பாதையில் கால்களை நன்றாக ஊன்றிச்செல்ல வேண்டும். சிறிது அப்பால் இப்பால் சென்றால் கால் சறுக்கி கிடுகிடு பாதாளத்தில் விழ நேரிடும். பனிப்பாதையில் நடந்து பழக்கமில்லாதவர்கள் அடிக்கடி பாதையில் விழுந்துவிடுவதுண்டு. நல்ல குளிராயிருந்தாலும் உடலிலிருந்து வியர்வைசொட்டும். அவ்வளவு வழுக்கலான பாதை.

பாதையைக் கடக்கின்ற கவனத்திலேயே யிருப்பதால், யாத்ரீகர்கள் அங்குள்ள அதிகமான குளிரை உணருவதில்லை.

அழகிய பள்ளத்தாக்கு

உச்சிக்காலத்தில், ஆறுதல் ஏற்படுகிற அளவு போதுமான தூரம் வந்திருப்போம். பாதை பள்ளத்தாக்குகளில் இறக்கமாய்ச் செல்லும். இப்பள்ளத்தாக்குகளில் பலவித வர்ணப் புஷ்பங்கள் பூத்து நறுமணம் வீசிக்கொண்டிருக்கும். இங்கே பனி கிடையாது. குளிரும் கிடையாது. நடுவில் பல பாலங்கள் வரும். பெரும்பாலும் இவைகள் உடைந்தே கிடக்கும். (ஆகஸ்ட் மாதத்தில் செப்பனிடப்பட்டிருக்கும்) பிறகு சாதாரண சீதோஷ்ணத்தையுடைய ஒருபள்ளத்தாக்குக்கு வருவோம். தூரத்தில் குடிசைகள், யாத்ரீகர், சமஸ்தான விடுதிச்சாலைகள் தென்படும். என்றாலும் இன்னும் 2 மணி நேரம் நடந்தால்தான் பஞ்சதரணியை அடைவோம்.

இதுவரையில் பல ஓடைகளையும், நதிகளையும் பார்த்திருக்கின்றோம். அவற்றில் ஓடுகின்ற தண்ணீரின் குளிர்க்கும் பஞ்சதரணியின் தண்ணீருக்கும் அதிக வித்தியாசமுண்டு. பஞ்சதரணித் தண்

(12-ம் பக்கம் பார்க்க.)


## இந்தியன் பாங்க் லிமிடெட்
### சென்னை

தேவகோட்டையில் பிராஞ்சு

தேவகோட்டையிலுள்ள நமது பாங்கின் ஷேர்ஹோல்டர்களும், பொதுஜனங்களும் கேட்டுக்கொள்வதற்கிணங்க தேவகோட்டையில் நமது பாங்கின் கிளை ஆபீஸ் ஒன்று கூடியசீக்கிரம் திறக்கப்பெறும்.

N. கோபால அய்யர்,
செக்ரிட்டரி.

'ஹரிஜன்' கட்டுரை

# என் கட்டுரைகள் தற்காலத்துக்கு மட்டு மல்ல

## என் வாழ்க்கைக்குப் பின்பே சில பலன் தருவன

### யூதர் பிரச்னைபற்றி மகாத்மா விளக்கம்

மகாத்மா 'ஹரிஜன்' பத்திரிகையில் நியூயார்க்கில் பிரசுரமாகும் ஒரு பத்திரிகையில் மிஸ்டர் எச். கிரீன் பர்க் எழுதிய வியாசத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்து அதற்குப் பதில் எழுதியிருக்கிறார்.

மிஸ்டர் கிரீன் பர்க் சொல்வதாவது:

காந்தியடிகள் யூதர்கள் விஷயமாக இரண்டுவிதக் குறை கூறியிருக்கிறார். யூதர்கள் கேவலமாக நடத்தப்படும் இடங்களில் யூதர்கள் சமாதானத்தை நிலை நிறுத்த வீரம் காட்டத் தவறியதாகக் கூறுகிறார். அவரே பாலஸ்தீனத்தில் யூதர்கள் ஏகாதிபத்தியக் கொள்கையை அநுஷ்டிப்பதாகவும் அராபியரை அங்கிருந்து துரத்தப் பார்ப்பதாவும் கூறுகிறார்.

காந்தியடிகள் உலகவிஷயத்தில் அவர் கொண்டுள்ள மனப்பான்மைக்கேற்ப இந்தக் குறையைச் சொல்லியிருக்கிறார். ஜெர்மனியிலுள்ள யூதர்கள் சத்தியாக்கிரஹ முறையைப் பயிலாமையால், அவர்கள் தற்போது ஆதரிப்பாரற்று இருப்பதாவும் கூறியிருக்கிறார்.

மகாத்மா கூறியுள்ள இரண்டாவது குறையைப் பற்றி கவனித்தால் அவர் எப்போதும் தீர்க்கமாக ஆராய்ந்து பார்த்த பிறகே ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசும் வழக்கத்துக்கு மாறாக இந்த யூதர்கள் விஷயத்தில் நடந்து கொண்டிருப்பதாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. இவ்விஷயத்தில் காந்தியடிகள் மதவெறியுடன் இஸ்லாம் மதம் எங்கும் பரவ வேண்டுமெனப் பிரசாரம் செய்பவர்களின் வார்த்தையைக் கேட்டு அவ்விதம் செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

இந்த வியாசத்தின் சுருக்கத்தைக் காந்தியடிகள் ஹரிஜன் பத்திரிகையில் வெளியிட்டுவிட்டு காந்தியடிகள் "யூதர்கள் பிரச்னை" என்று தலைப்பிட்டு பின் வருமாறு எழுதுகிறார்:—

#### கட்டுரை எழுதியதேன்?

தோஷம் கூறவேண்டு மென்ற மனோபாவத்துடன் நான் அக்கட்டுரையை எழுதவில்லை. யூத நண்பர்கள் சிலர்கள் இவர்களது வேண்டுகோளுக்கிணங்கவே நான் அதை எழுதினேன் வேறெந்த முறையிலும் நான் அதை எழுத முடிவு செய்யவில்லை. ஆனால் அதை எழுதியவுடனே யூதர்கள் என்னுடைய அபிப்பிராயத்தை ஏற்றுக்கொண்டு விடுவரென நான் நம்பவேயில்லை. அவர்களில் ஒருவர் எனது அபிப்பிராயத்தின் வலிமையை அறிந்து மனமாற்றமடைந்திருந்தாலும் நான் திருப்தியடைந்திருக்க வேண்டும்.

தவிர தற்காலத்துக்காக மட்டும் நான் அக்கட்டுரையை எழுதவில்லை. நான் எழுதும் கட்டுரைகளில் சில என் வாழ்நாள் முடிந்ததற்குப் பிறகு கூட உயிருடனிருக்கு மென்றும், அவை எந்தெந்த நன்மையை முன்னிட்டு எழுதப்பட்டனவோ அவற்றிற்குப் பயன்படுமென்றும் நான் நம்பித் பெருமை யடைகிறேன் எனக்குப் தெரிந்தவரையில் என்னுடைய கட்டுரைகளால் யூதர்களில் ஒருவர் கூட மனமாற்றமடையவில்லையே என்பது குறித்து நான் ஏமாற்றமும் கொள்ளவில்லை.

பதிலைப் பன்முறை படித்திருப்பதால் இப்பொழுது நான் அதற்குப் பதில் கூறவேண்டும். என்னுடைய கட்டுரையில் வெளியிட்ட அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளுவதற்குக் காரணமேயில்லை. ஜெர்மனியில், யூதர்களுக்குள் காந்தி ஒருவர் தோன்றினால் அவர் ஐந்து நிமிஷங்களுக்குத் தான் வேலை செய்ய முடியுமென்றும், உட்னே அவர் தூக்குமேடைக்கு அழைத்துச் செல்லப்படுவார் என்றும் மேற்படி கடிதமெழுதியவர் கூறியிருப்பது ஒருவேளை உண்மையாகவே நடக்கலாம். ஆனால் அதன் காரணமாக நான் குறிப்பிட்ட விஷயங்கள் பொய்யாகிவிடாது. அன்றி அஹிம்சைச் சக்தியில் எனக்குள்ள நம்பிக்கையும் ஆட்டமெடுத்து விடாது.

#### அஹிம்சை

அஹிம்சையில் நம்பிக்கையில்லாத சர்வாதிகாரிகளின் பசியைத் தணிப்பதற்காக நூற்றுக் கணக்கானவர்களல்ல, ஆயிரக்கணக்கானவர்களும் பிராணத் தியாகம் புரிய வேண்டிய அவசியத்தை நான் எண்ண முடியும் மகத்தான ஹிம்சையை மிகுந்த பலன் தரத்தக்க வகையில் எதிர்த்து நிற்கக்கூடியது அஹிம்சைதான். இத்தகைய நிலையில்தான் அஹிம்சையின் உண்மையில் சோதனை ஏற்படுகிறது. கஷ்டப்படுகிறவர்கள் தங்கள் வாழ்நாளுக்குள்ளாகவே பலனைப் பார்க்க வேண்டியதில்லை. தங்கள் லட்சியம் உயிருடனிருக்குமானால் அது பலன் பெறுவது நிச்சயமென்ற நம்பிக்கை அவர்களுக்கு இருக்க வேண்டும். பலன் விஷயத்தில் அஹிம்சா மார்க்கத்தைவிட பலாத்கார முறை அதிகப்படியான உத்தரவாதத்தைக் கொடுக்கவில்லை. உண்மையில் அது குறைவாகவே கொடுக்கிறது.

எல்லாப் பிரச்னைகளையும் தீர்ப்பதில் நான் வழக்கமாக சத்தியத்தில் ஊக்கமும் சிரத்தை காட்டுவதையும் இந்த யூதர் பிரச்னையில் காட்டவில்லையென மேற்படி நண்பர் கூறியிருக்கிறார். நான் அக் கட்டுரையை எழுதியபோது சத்தியத்தில் எனக்குள்ள ஆர்வமோ, ஊக்கமோ, சிரத்தையோ, துளிகூடக் குறையவில்லையென்று தான் நான் சொல்லமுடியும்.

கடிதத்தை எழுதியவர் என் மீது சாட்டியுள்ள 2-வது குற்றம் அதை விட அதிகப் பிரமாதமானதாகும். நான் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையில் கொண்டுள்ள உற்சாகத்தினால் நான் பக்ஷபாதங் கொண்டு அராபியரது கட்சியை எடுத்துரைத்ததாகவும் அந்த அபிப்பிராயம் இந்தியாவில் இயற்கையாக வற்புறுத்தப் பட்டிருப்பது அதற்கு ஒரு காரணமென்றும் சொல்லப்படுகிறது.

#### இந்தியாவின் விடுதலைக்காகக்கூட சத்தியத்தைக் கைவிடமாட்டேன்

இந்தியாவின் விடுதலைக்காகக்கூட நான் சத்தியத்தைக் கைவிடமாட்டேன் என்று அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். முஸ்லிம்களின் சிநேகத்தைப் பெறுவதற்காக நான் சத்தியத்தைக் கைவிடமாட்டேன். கிலாபத் பிரச்னையில் நான் எப்படித் தவறாக நடந்து கொண்டேனோ அப்படியே யூதர் பிரச்னையிலும் தவறாக நடப்பதாக அக் கடிதத்தின் கர்த்தா கருதுகிறார். இவ்வளவு காலமான பிறகுகூட கிலாபத் கட்சியை மேற்கொண்டதற்காக நான் சற்றும் வருந்தவேயில்லை. எனது வற்புறுத்தல் எனது மனோபாவம் சரியானதென்பதை நிரூபிக்காதென்பது எனக்குத் தெரியும். 1919-20-ம் வருஷத்தில் நான் செய்த செயல்பற்றி தற்போது எனது மனோநிலை எப்படி இருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ள விரும்புவோருக்கு இது அத்யாவசியமாகும்.

"ஜுயிஷ் பிராண்டியர்" என்ற பத்திரிகையின் ஆசிரியருக்கோ அன்றி என்னுடைய பல யூதநண்பர்களுக்கோ என்னுடைய இந்த வியாசம் சற்றும் திருப்தியளிக்காதென்பது எனக்கு நன்கு தெரிந்திருக்கிறது. இதுபற்றி நான் வருந்துகிறேன். ஜெர்மெனியில் யூதர்களைத் துன்புறுத்துவது எப்படியேனும் நிற்கவேண்டு மென்றும், பாலஸ்தீனப் பிரச்னையில் எல்லாத்தரப்பினருக்கும் திருப்தியை உண்டாக்கக்கூடிய முடிவேற்படுமென்றும் நான் மனப்பூர்வமாக விரும்புகிறேன்.


இந்தியா சர்க்கார் நற்சாட்சிப் பத்திரம் கூறுகிறது:-

"டால்மியா சிமிண்ட் பிரிட்டிஷ் ஸ்டாண்டர்டு முறைப்படி செய்த மற்ற மார்க் சிமிண்டுகளை விட உயர்வானது"

★

டால்மியா இந்திய சிதோஷ்ண நிலைமைக்குத் தகுந்த மாதிரி தயாராகிறது.

★

டால்மியா சிமெண்டையே உங்கள் கட்டிடங்களுக்கு உபயோகியுங்கள்.

ஏஜண்ட்ஸ்:-

சௌத் இந்தியா கார்பொரேஷன் (மதராஸ்) லிமிடெட்,

காரைக்குடி.


## சிங்கப்பூர்

நாட்டுக்கோட்டை செட்டியார்களின் வர்த்தக சங்கம்

12—5—1939 வெள்ளிக்கிழமை மாலை சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. லெ.அ. அ.அண. நாகப்பசெட்டியார் அவர்கள் தலைமையில் 9வது ஆண்டு 4வது நிர்வாக சபைக்கூட்டம் நடைபெற்றது.

தீர்மானங்கள்

10—3—1939ந் தேதி முதல் 12—5—39 ந் தேதி வரையில் உள்ள கணக்குகளும் 9 வது ஆண்டு 3 வது நிர்வாக சபைக்கூட்ட நிகழ்ச்சிகளும் வாசித்துக் காண்பிக்கப் பெற்று அங்கீகரிக்கப் பெற்றன.

பெ. அழ. ச. கடையிலிருந்து வந்த பிரவேசப் பத்திரம் வாசித்துக் காண்பிக்கப் பெற்று மேற்படி கடையை நமது சங்கத்தில் அங்கத்தினராகப் பதிவு செய்துக் கொள்வதெனத் தீர்மானிக்கப் பெற்றது.

## ஆலயப்பிரவேச மகாநாடு

இராமநாதபுரம் தாலுகா முதலாவது ஆலயப் பிரவேச மகாநாடு இராமநாதபுரம் நகரத்தில் ஜூன் 2-வது வாரத்தில் நடைபெறுமெனத் தெரிகிறது.

அகில இந்திய ஹரிஜன சேவா சங்க உதவித் தலைவர் ஸ்ரீமதி ராமேஷ்வரி நேரு இம் மகாநாட்டைத் திறந்து வைக்குமாறும், ராமநாதபுரம் ராஜா மகாநாட்டுக்குத் தலைமை வகிக்குமாறும் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். தமிழ் நாடு ஹரிஜன சேவா சங்கத் தலைவராகிய ஸ்ரீ வ. வைத்தியநாத அய்யர் தேசீயக்கொடி ஏற்றிவைப்பார்.



## தேவகோட்டை

வர்த்தக சங்கம் உத்தியோகஸ்தர் தேர்தல்

தேவகோட்டை வர்த்தக சங்கத்தின் 3-வது ஆண்டு உத்தியோகஸ்தர்கள் தேர்தல் மே 27உ இரவு 7-மணிக்கு தேர்தல் அதிகாரியான ஸ்ரீ டி. எல். நாகசுந்தரமய்யர் தலைமையில் நடைபெற்றது. 16 மெம்பர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்று அதில் ஸ்ரீ வி. எம். வி. பாலுசாமி மூப்பனார் தலைவராகவும் ஜனாப் ஏ. முகமத் மூகைதீன் உபதலைவராகவும் ஸ்ரீ ஒய். பகவந்தராவும் ஸ்ரீ ஏ. குருசாமி பிள்ளையும் கூட்டுக் காரியதரிசிகளாகவும் ஜனாப் எஸ். ஷம்சுதீன் சாகேப் பொக்கிஷதாராகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். சென்ற வருஷத்து சங்கத்தின் தலைவராயிருந்த ஸ்ரீ டி. எல். நாகசுந்தரமய்யர் பல இடையூறுகளுக்கிடையே சங்க நிர்வாகத்தைத் திறமையுடன் நடத்தியமைக்காக மேற்படியார் இவ்வருஷக் கௌரவ அங்கத்தினராக சேர்த்துக்கொள்ளப்பட்டார்.

### இளைஞர் சங்கம்

இளைஞர் சங்க 4 வது ஆண்டுவிழா 23—5—39 மாலை நகரத்தார் ஹாலில் ஸ்ரீ முத்து கரு. அரு. கரு. அருணசலம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

சென்னை மணிக்கொடி ஆசிரியர் ஸ்ரீ ப. ராமசாமி "ரஷ்யாவும் புதுநாகரீகமும்" என்னும் பொருள் பற்றியும் சங்கரன்கோவில் ஸ்ரீ ந. சோமயாஜுலு "பாரதியின் பாநயம்" என்னும் பொருள் பற்றியும் லால்குடி ஸ்ரீ அ. ச. ஞானசம்பந்தன் "உலகசமயம்" என்னும் பொருள் பற்றியும் சொற்பெருக்காற்றினார்கள்.

## திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ்

அங்கத்தினர் சேர்த்தல்

காரைக்குடி ஜில்லா திருப்பத்தூர் தாலுகாவிலுள்ள எல்லா கிராம காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் காங்கிரஸ் அபிமானிகளுக்கும் திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீ பி. எம். கிருஷ்ணன் விடுக்கும் வேண்டுகோள்:—

சென்ற வருடம் நமது தாலுகாவிலே 14264 மெம்பர்கள் சேர்த்தது போல தமிழ் நாட்டில் எந்தத் தாலுகாவிலும் சேர்க்கவில்லை. அத்துடன் நமது ஜில்லாவுக்கே வள்ளியப்பா ஷீல்டும் கிடைத்திருக்கிறது. இவ்வருஷம் அதிகப்படியான மெம்பரை சேர்த்துவிடுவதற்கு காலம் மிகச் சுருக்கமாயிருப்பதால் குறைந்தபட்சம் (20,000) இருபதாயிரம் மெம்பராவது சேர்த்து விடவேண்டும் என மிகவும் பணிவுடன் திருப்பத்தூர் தாலுகா வாசிகளைக் கேட்டுக்கொள்ளுகிறேன். சில கமிட்டிகள் இன்னும் புத்தகம் வாங்கிக் கொள்ளாமலிருக்கின்றன. எந்த நேரத்திலும் குன்னக்குடியில் திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டி ஆபீசில் வந்து வாங்கிக்கொள்ளலாம். சில கிராம காங்கிரஸ் கமிட்டிகள் தேர்தல் நடத்தாமலிருப்பதையும் உடனே நடத்தி தாலுகா காங்கிரஸ் ஆபீசுக்குத் தெரிவிக்கும்படியும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

## சதுர்வேதமங்கலம்

சதுர்வேதமங்கலத்தில் சுமார் 80 வருஷங்களாக இருந்துவந்த போலீஸ் ஷ்டேஷனை 14 வருஷங்களுக்குமுன் நெய்க்குப்பைக்கு மாற்றிவிட்டார்கள். இது பற்றி ஸ்ரீ ஆ. சொ. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையின் அரியமுயற்சியால் 1—5—39 முதல் மீண்டும் சதுர்வேதமங்கலத்தில் போலீஸ் ஸ்டேஷன் திறக்கப்பட்டிருக்கிறது. திறப்புவிழாவுக்கு காரைக்குடி சர்க்கிள் இன்ஸ்பெக்டரும் மற்ற அதிகாரிகளும் வந்திருந்தார்கள்.

இவ்வூரில் சர்க்கார் பள்ளிக்கூடம் ஒன்றும் சர்க்கார் கிணறு ஒன்றும் ஏற்படுத்தவேண்டும் என்பது ஊர்வாசிகளுடைய விருப்பம்.

## திருச்சி

மாணவர் இல்லம்

சென்னையில் நடந்துவந்த மாணவர் இல்லத்துக்கு வேண்டிய ஏற்பாட்டுக்குரிய விஷயங்களை ஊழியனில் அறிந்திருக்கலாம். ஆனால் திருச்சியில் நடத்துவதினால் பெற்றோர்கள் மாணவர்கள் போக்குவரத்துக்கு வசதி என்பதை உத்தேசித்து திருச்சிக்கு மாற்றி அதில் பல மாணவர்கள் சேர்ந்து கொண்டார்கள். மேலே சேர விருப்பமுள்ளவர்கள் கீழ்க் கண்டவரிடம் தெரிந்து சேர்ந்து கொள்ளும்படி வெ. நா. வெ. நாகப்ப செட்டியார். (ஆர்ச் ரோடு தேவகோட்டை) எழுதுகிறார்.

## டெலுக்கான்சன்

சித்திரா பௌர்ணமி உற்சவம் மே 3ம் நாள் ஸ்ரீ தெண்டாயுதபாணி சித்திராபர்வ மஹோற்சவம் அதிக விமரிசையாக நடந்தேறியது. பால் காவடிகளும், வேல் காவடிகளும் இளநீர்க்காவடிகளும் ரதக்காவடிகளும் பக்த கோஷமாக முருகபிரானின் அனுக்கிரகம் பெற்று அதிக் குதூகலத்துடன் காவடிகளைச் செலுத்திச் சென்றனர். அநேக மக்களுக்குப் போஜனமளிக்கப் பெற்றது. மறுநாள் இரவு முருகக் கடவுள் வெள்ளி ரதத்தில் திரு வீதிகளில் திருவுலாக்காட்சி வெகு விமரிசையாயிருந்தது.

மே 4ம் நாள் இளைஞர் சங்கத்தின் சார்பில் காலை 8-30 மணிக்கு திரு மு. ப. சிவராமன் செட்டியார் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. பல அன்பர்கள் குழுமியிருந்தனர். பல அறிஞர்களும் தலைவர்களும் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

## சத்திய சோதனையில் ஒரு அத்தியாயம்

ஸ்கூல் பைனல் வகுப்புக்குப் பாடம்

மகாத்மா காந்தி எழுதிய 'சத்திய சோதனை' என்ற புத்தகத்திலிருந்து ஒரு அத்தியாயம் வருகிற வருஷத்து ஸ்கூல் பைனல் வகுப்புப் பாடமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

## கானையார்கோவில்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலை

உபன்னியாச சபை ஆதரவில் ஸ்ரீ மாணிக்கம் தலைமையில் வெகுதான்யவரு வைகாசிமீ 12உ (26—5—1939) இரவு 8 மணிக்கு அடியிற்கண்ட நண்பர்களால் கீழ்க் கண்ட விபரப்படிக்கு சொற்பொழிவாற்றப்பட்டு இரவு 9-30 மணிக்கு கூட்டம் வந்தனோபசாரத்துடன் முடிந்தது.

1) சதுர்வேதமங்கலம் ஸ்ரீமான் மீ. பாலகணேசன்—"ஹிந்தியின் அவசியம்", (2) ஸ்ரீமான் ஆ. சிவஞானம் "தமிழகத்தின் பழமை" (3) ஸ்ரீமான் மு. தங்கவேலு— "இளைஞர்களின் கடமை" (4) ஸ்ரீமான் சிவப்பிரகாசம்—"தற்கால இந்தியர்" (5) ஸ்ரீமான் கெ. மு. ராமனுதன்— ஷை (6) ஸ்ரீமான் R. வெங்கடேஸ்வரன்—ஷை.

## ஓ. சிறுவயல்

21—5—39 ஓ. சிறுவயலிலுள்ள ஸ்ரீ பொன்னழகியம்மாள் வித்தியாசாலைக்காக ஓ. சிறுவயல் நகரத்தார்கள் ரூ. 1,20,000 செலவில் கட்டி உதவியுள்ள வித்தியாசாலைப் புதிய கட்டிடத்தின் திறப்பு விழா கேற்று மாலை 5-மணிக்கு இராமநாதபுரம் ஜில்லாபோர்டு தலைவர் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

பள்ளிக்கூடத்தின் மத்தியில் அமைக்கப்பட்டுள்ள கம்பத்தில் தாயின் மணிக்கொடியை ஜில்லா போர்டு மெம்பர் ஸ்ரீ கரு, முத்து சிவலிங்கம் ஏற்றி வைத்து நகரத்தார்கள் கல்வி அபிவிருத்தியின் நிமித்தம் செய்துள்ள ஏற்பாட்டைப் பாராட்டிப் பேசினார்.

பின்னர் ஸ்ரீ வ. சொ. ராம. வள்ளியப்ப செட்டியார் மகாத்மா படத்தையும் காரைக்குடி முனிசிபல் கவுன்சிலர் ஸ்ரீ ஆரு. அ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் பண்டித ஜவஹர்லால் நேரு படத்தையும் திறந்துவைத்தார் தலைவர் முடிவுரைக்குப் பின்னர் கூட்டம் இனிது முடிந்தது.

## மாணிக்கத்தைக் கண்டீர்களா?

எஸ். சொக்கனாதபுரம் விவேகானந்த வாசகசாலைக் காரியதரிசி ஸ்ரீ சி. சுப்பிரமணியன் செட்டியார் எழுதுவதாவது:—

எனது தமையனார் (சி. சோம.) மகன் கருப்பஞ் செட்டி யென்னும் மாணிக்கம் சுமார் 2 வருடங்கட்கு முன் இரங்கூனிலிருந்து எனக்கு கடிதம் எழுதியிருந்தான். அதன்பிறகு கடிதம் எழுதாமல் இருப்பதுடன் இன்ன ஊரில் இன்ன இடத்தில் இருக்கிறான் என்ற ஒரு விபரமும் தெரியவில்லை. இதைக் கண்ணுறும் அன்பர்கள் ஷை பேர்வழியைச் சந்தித்தால் அவன் இருக்குமிடத்தைத் தயைசெய்து விசாரித்து "காரியதரிசி விவேகானந்த வாசகசாலை, எஸ். சொக்கனாதபுரம், சருகணி போஸ்டு, இராமனாதபுரம் ஜில்லா" என்ற விலாசத்திற்கு எழுதியனுப்புமாறு கேட்டுக்கொள்கிறேன்.

## கொத்தமங்கலம்

2-6-39 வெள்ளிக்கிழமை வைகாசி அனுடநாள் தமிழ் நாட்டின் எல்லாவிடங்களிலும் திருவள்ளுவர் திருநாளைத் தமிழ் நாட்டினர் கொண்டாட வேண்டுமெனக் கொத்தமங்கலம் பாரதி நிரசாணர் இயக்கத்தார் கேட்டுக் கொள்கின்றனர்.

## ஸ்ரீ ஆர். வி. சாமிநாதன் திருமணம்

காரைக்குடி ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி பாகனேரி திரு. ஆர். வி. சுவாமிநாதனுக்கும், தஞ்சாவூர் ஜில்லா ஆடுதுறை திருவாளர் வி. ரெத்தினசாமித் தேவர் குமாரத்தி திருமதி தையல்நாயகி தேவிக்கும் 24—5—39 காலை பாகனேரியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் இருவரும் கதராடை அணிந்திருந்தனர். நண்பர்களும், சுற்றத்தாரும் வந்திருந்தனர். விவாகம் சீர்திருத்த முறையில் நடைபெற்றது.

## மதுரை ஜில்லா ஹரிஜன மகாநாடு

24—5—39 மதுரை ஜில்லா ஹரிஜன மகாநாடு மேலூர் தாலுகா கீழையூரில் ஹரிஜன சேரியில் ஜில்லா போர்டு உபதலைவர் ஸ்ரீ கே. வெங்கடாசலபதி தலைமையில் நடைபெற்றது. மந்திரி கனம் கோபால் ரெட்டி மகாநாட்டைத் திறந்துவைத்தார்.

தமிழ்நாட்டிலுள்ள எல்லா ஆலயங்களையும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட சட்டம் உடனேசெய்யுமாறு சென்னை சர்க்காரைக் கேட்டுக்கொள்வதாகவும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.


LODHRA

லோத்ரா

கர்ப்பசய ரோக நிவாரணி

சிறந்த ஒளஷதம்

கேசரி குடீரம்
ராயப்பேட்டை மதராஸ்.



ஹைதராபாத் 9-5-38.
ஐயா,
... வாந்தி செய்து கொண்டிருந்த ஒரு வருக்கும், வயிற்று வலியினால் தொந்திரவு பட்டுக்கொண்டிருந்த மற்றொருவருக்கும் கொடுத்ததில் "மின்சாரரசம் தங்கமான மருந்து" என்று நிரூபித்து காட்டியது.
டாக்டர் S.R. ராஜாராம், M.B.,B.S.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் சிறந்த டாக்டரைப் போல உதவக்கூடியது

மின்சாரரசம்

மனிதர் தலை முதல் கால்வரை வரும் சகல வியாதிகளுக்கும் தேவாமிருதம் போன்றது.
ஒரே முறை பரீக்ஷியுங்கள். புட்டி 1-க்கு ரூ. 2—0—0. எல்லா இடங்களிலும் கிடைக்கும்.
விலாசம்: மின்சாரரசம் கம்பெனி லிமிடெட், சேலம்.

முத்துக்காளிவலசு, 27-9-37.
ஐயா,
... எனக்கு 25 வருஷகாலமாக வயிற்றுவலி இருந்தது. மின்சாரரசம் சாப்பிட்ட பிறகு பறந்தோடி விட்டது. இப்பொழுது சுகமாயிருக்கிறேன்...
நாச்சிமுத்து கவுண்டர்.

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேனுல்

பிரமாதி-ஞு வைகாசி-மீ 18உ (1—6—39) வியாழன்

## மது விலக்கும் வரி விதிப்பும்

சென்னை மாகாணம் காங்கிரஸ்க்காரர் ஆட்சியில் வந்த பிறகு மாகாண ஆட்சியில் மது விலக்குக் கொள்கை புகத்தொடங்கியது. மதுவினுல் உண்டாகும் தீமைகளைப்பற்றி விரித்துரைக்க வேண்டிய நிலையில் இன்று உலகம் இல்லை. கள் குடித்தல் கூடா வொழுக்கம் என்பது பன்னெடுங்காலமாக அறிஞர்கள் வற்புறுத்திவரும் ஒன்று. அறநூல் வகுத்த பேராசிரியர் பலர் குடியைக் கடிந்திருக்கின்ருர். என்ருலும் அது தொலையவில்லை. குடித்துவிட்டு ஆடுவதை ஒரு பெரிய நாகரிகம் எனக் கருதுகின்ருர் மேற்கு நாட்டார். குடி தள்ளத் தக்கது என்க் கருதி அதனை அழிக்க முயன்ற சில வெளி நாட்டார் வெற்றி கண்டிலர். குடி மிகக் கேவலமானது என மதிக்கும் நாடு இந்த இந்தியா. அவன் குடிகாரன் என்று ஒருவன் கூறப்பட்டால் அது பெரிய இழுக்கு இந்த நாட்டில்.

என்ருலும் குடியின் பெருக்கம் குறையவில்லை. மாகாண அரசாங்கம் குடிக்கும் பொருளுக்கு விதிக்கும் வரியால் வருஷம் ஒன்றுக்கு நான்கு கோடி ரூபாய்க்கு மேற்பட்ட வருமானம் அடைகிறது. மாகாணத்தின் மொத்த வரும்படியில் நான்கில் ஒரு பங்கை மதுக்கொடுக்கின்றது என்ருல் மதுவின் வரவு செலவு எவ்வளவு இருக்கும் என்று ஊகிக்கலாம். ஏராளமான பணம் மதுவில் போய் மாள்கிறது ஏழைகள் ரத்தம் சிந்திச் சம்பாதிக்கும் சிறிய பொருளில் பெரிய பகுதி கள்ளுக்குத் தொலைக்கப்படுகின்றது. அநேகம் குடும்பங்கள் கள்ளினுல் அடியோடு நாசமாகிவிட்டன. வேறு எது இல்லாதிருப்பினும் கள்ளின்றி வாழ முடியாது எனப் பழகிவிட்டார் ஏழைப் பாமரர் பலர்.

இப்பரிதாப நிலைமையைப் போக்கப் பழைய மாகாண அரசாங்கம் முந்தவில்லை. மிதக் குடிப் பிரசாரம் என ஒன்றை ஆரம்பித்துச் சில இலட்சங்களை வேண்டிய சில பலர்க்குக் கொடுத்ததல்லது வேறு பயன் ஒன்றும் கண்டிலது பழய மாகாண அரசாங்கம். மாகாண அரசாங்கங்கள் காங்கிரஸ்க்காரர் கைக்கு வந்த இடங்களில் மதுவிலக்குக் கொள்கை கவனிக்கப்பட்டது. நாட்டு மக்கள் நல்வாழ்வு வாழ்தற்குக் கட்குடியைத் தொலைத்தேயாக வேண்டும் என்பது காங்கிரஸ்க் கொள்கைகளுள் ஒன்று. எனவே காங்கிரஸ்க்காரர் பதவியேற்ற மாகாண அரசாங்கங்கள் மதுவை விலக்கல் பெருங்கடமையாகிறது. அக்காரியம் ஆங்காங்கு தொடங்கப்பட்டது. சென்னை மாகாணம் இப்போது மூன்று ஜில்லாக்களில் மதுவிலக்குக் கொள்கையைப் புகுத்தியது. இது மிகக் குறைவு.

இதில் ஆமைபோல் இவ்வளவு மெதுவாக ஊர்ந்து செல்வது காந்தியடிகட்குப் பிடிக்கவேயில்லை. அடிகள் இதுபற்றிப் பலமாகக் கூறியிருக்கிறுர். இப்படியே போனுல் மிகப்பல ஆண்டுகள் செல்லும். எப்படியும் அதிகக்காலம் ஆகாமல் முழுதும் யாண்டும் மதுவை நிறுத்தியாகவேண்டும். அதற்குப் பெருந்தடையாக விருப்பது மாகாண அரசாங்க வருவாய் பாதிக்கப்படுவதே. அதற்கு வழிசெய்தால் முழு மதுவிலக்கை உடனே செய்துவிடலாம். ஒரு வரியை இழக்கும்போது இன்ெனுருவரிப் போட்டாலன்றி வரவு செலவு கணக்கை ஈடு செய்ய முடியுமா? மக்களைப் படுகுழியில் தள்ளும் தவருன வழியில்வரும் வருமானத்தைத் தொலைக்கும்போது, சுமக்கமுடிந்தோர் சிறிது வரிப்பளுவைத் தாங்கித்தான் ஆகவேண்டும்.

"ஆற்றுவார் மேற்றே பொறை" என்ருர் புலவர் பெருமான். எங்குபார்த்தாலும் விற்பனைவரி, புகையிலைவரி, பெட்ரோல்வரி என்ற பேச்சே காணப்படுகின்றது. ஏழைகள் நலனுக்காகப் பண்டங்கள் விற்போர், வாங்குவோர், சம்பந்தப்பட்டோர், வியாபாரப் பெருக்குக்கு ஏற்றவாறு—தகுதிக்குத் தக்கவாறு வரிக்கொடுப்பதில் பிழையொன்றுமில்லை. எதையாவது சொல்லித் தூற்றவேண்டும் என்ற, ஒன்றுக்குமுதவாத எதிரிகள் என்போரின் வீண் பிரசாரத்தைக் கண்டு கலங்க வேண்டுவதில்லை. எதைச் செய்தாலும் எதிர்ப் பிரசாரம் செய்வது என்ற சில பிரகிருதிகள் எங்கும் எல்லாவற்றிலும் இருக்கத்தான் செய்கின்றன. அவைகளை நம்பி ஏமாறலாகாது. எதையும் சிந்தித்துப்பார்த்து முடிவுகாண்டலே அறிவுடைமை. மதுவைத் தொலைப்பதற்கு எவ்வளவு சிரமப்பட்டும் எந்த வரியும் கொடுக்கலாம்.

அதினின்றும் கிடைக்கும் வருமானம் ஈடு செய்யப்படுமேல் மதுவை முற்றிலும் ஒழித்துவிடலாம். சேலம், சித்தூர், கடப்பை ஆகிய மூன்று ஜில்லாக்களில் இன்று மதுவிலக்கு அமுலில் இருக்கிறது. இந்தவாரம் குன்னூரில் பிரதம மந்திரி அறிஞர் கனம் இராஜகோபாலர் பேசிய உரை நமக்கு மகிழ்ச்சியளிக்கின்றது. இன்னும் பத்து ஜில்லாக்களில் மதுவிலக்கு ஆரம்பிக்கப்படலாம் என அவர் மொழிகிருர். இந்த மாகாணத்தில் 26 ஜில்லாக்கள். இன்னும் 10 என்ருல் மாகாணத்தில் பாதியாகிறது. இது போதாது. எஞ்சிய பகுதியும் ஒருசேர மதுவை விலக்க விரைவில் ஏற்பாடு செய்யப்படல் வேண்டும். அதற்கு மக்கள் ஒத்துழைப்பு அவசியம். நமது பிரதம மந்திரி அதனையே வேண்டுகிருர். நாம் உதவினுல் முழு மதுவிலக்கு உடனே வந்துவிடும். எவ்வித எதிர்ப்புமின்றி நாடு இவ்வழியில் அரசாங்கத்துக்குத் தாராளமாக உதவுவதாக!

## இடி முழக்கம்

### மதுரை மகாநாடு

அண்மையில் மதுரை ஜில்லா ஹரிஜன மகாநாடு மதுரையில் கூடிற்று. கனம் கோபால் ரெட்டி அதைத் திறந்துவைத்தார். அப்போது,

"ஹரிஜனங்களுக்கு ஆலயப்பிரவேச உரிமையளிப்பது கஷ்டமான, விரும்பத்தகாத காரியமல்ல. அது நடைபெற்றுத் தீர வேண்டிய ஒன்று. 1940-ம் ஆண்டு முடிவில் அல்லது 1941-ம் ஆண்டுத் தொடக்கத்தில் ஹரிஜன மக்களுக்கு எல்லா ஆலயங்களிலும் பிரவேச உரிமை வழங்கப்படுமென்று நம்புகிறேன்"

எனக் கூறியிருக்கிருர். மலையாளத்துக்கு மட்டும் இந்த மசோதா 'நிறைவேறி இதுகால் அங்கு அமுலில் இருக்கின்றது. தமிழ் நாட்டில், ஹரிஜனங்கள் ஆலயங்களில் நுழைகின்ற ஒரு வைபவத்தை, ஒரு பெருந் திருவிழாவை நேரில் நடத்திக் கண்டு களித்து மகாத்மாவை மகிழவைக்காமல் தாம் உயிர்விடப் போவதில்லை என நம் பிரதம மந்திரி கனம் ராஜாஜி சொன்ன உறுதியான சொற்கள் இன்றும் நம் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. பல நூற்ருண்டுகளாய் ஹரிஜன ஹிந்துக்களை ஆலயங்களிலிருந்து விலக்கி வைத்து, அவ்வாறு செய்த அடாத செயலை ஒரு குற்றமெனக் கூட உணராதபடி ஊறிப்போன இக் காலத்தில், இன்று அல்லது நாளை ஹரிஜன ஆலயப் பிரவேச உரிமையை வழங்குவதால் பொருளாதாரத்தில் ஹரிஜனங்களுக்கோ மற்றவர்களுக்கோ கால் காசுக்கும் பலன் ஏற்பட்டுவிடாது. மதுவிலக்குச் சட்டத்தாலோ ஹரிஜன மக்களுக்குக் காசு மிஞ்சும். ஒழுக்கம் வளரும். இது பற்றியே கனம் ராஜாஜி மதுவிலக்கை முன்னுல் ஏற்படுத்தினுர். காங்கிரஸ் சர்க்கார் 1940-ம் ஆண்டு இறுதி, அல்லது 1941-ம் ஆண்டு முற்பகுதியில் ஒரு சட்டஞ் செய்யப்போவது கேட்டுப் பெரு மகிழ்ச்சி யடைகின்ரேம். பல நூற்ருண்டுகளாய் அமுலில் இருந்த ஒரு தீங்கு இரண்டு ஆண்டுகளில் நீங்கப்போவதாயின், அது ஒரு காலதாமதமென்று ஆகாது.

### ஜெட்லண்ட் பகட்டு

லண்டனில் ஏகாதிபத்திய விருந்தொன்று நடந்தது. இந்தியா மந்திரி லார்ட் ஜெட்லண்ட் அங்கு பேசியபோது, "பிரிட்டிஷ்ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அழித்துவிட வேண்டுமென இந்திய அரசியல் தலைவர்கள் அபிப்பிராயங் கொண்டிருக்கிருர்கள்" எனக்கூறியிருப்பது அவருடைய கூர்ந்த அறிவையே காட்டுகின்றது. அவருடைய அறிவை மெச்சுகின்ரேம். அவருடைய கூற்றில் எள்ளத்தனையும் தவறில்லை! ஆனுல், "பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இல்லாதிருந்து வேறென்றின் கீழ் இந்தியா இருக்குமாயின், காங்கிரஸ் இவ்வளவு தூரம் வளர்ச்சியடைந்திருக்குமா? வேறு ஏகாதிபத்தியத்தை இந்தியர்கள் அனுபவித்துப் பார்த்தால் தெரியும்" என்று இந்தியா மந்திரி குறிப்பிட்டிருப்பது அவ்வளவு உயர்ந்த கருத்துடையதல்ல. 'பரிபூரண நியாயம் இல்லைதான்; என்ருலும் இவ் அநியாயத்தை அதிகம் என்று சொல்வதற்கில்லை' என்ற பொருளை உணர்த்துகின்ருற் போலிருக்கிறது அவருடைய பேச்சு. பூரண உரிமையை வழங்கவேண்டியது பிரிட்டனுடைய கடமை என்பதையும், அடிமைப்பட்ட தேசத்துக்கு சுயேச்சை உடைமையைப் பெறுவதுதான் கோரிக்கையாயிருக்க முடியும் என்பதையும் இந்தியா மந்திரி உணர்ந்துகொள்ளவேண்டும். ஏனைய ஏகாதிபத்தியங்களைப்போல பிரிட்டன் ஏகாதிபத்தியம் அவ்வளவு மோசமாக நடந்து கொள்ளவில்லை என்கிருர். பிரிட்டன் மோசமாக நடந்துகொள்ளாததற்காக வந்தனம் லார்ட் ஜெட்லண்டுக்கு!

### பிரிட்டன் பணிவு

பிரிட்டனுக்கு எப்போதுமே ருஷ்யா என்ருல் பிடிக்காது. இன்று ஹிட்லரும் முசோலினியும் ஐரோப்பாவில் தலைதூக்கி நிற்பதற்குக் காரணம், பிரிட்டன் ருஷ்யத் திட்டத்தின் மீது கொண்ட வெறுப்பேயாகும். சோவியத் ருஷ்யாவின் கொள்கைக்கு உட்பட்ட, அல்லது உட்படக்கூடிய நாடுகள், ஏகாதிபத்திய அல்லது பாஸிஸத் தேசங்களுக்கு அடிமைப்படவேண்டுமென்று பிரிட்டன் ஓரளவு விரும்பிற்று. இவ் விருப்பப்படி நடந்த ஜர்மெனியும், இத்தாலியும் பிரிட்டனைக் கூடப் பொருட்படுத்த வேண்டாத நிலைக்குப் பலம்பெற்றன. இதுகண்டு பிரிட்டனும், பிரிட்டனின் சகபாடியான பிரான்சும் வேறு வழியில்லாது ருஷ்யாவின் துணையைத் தேடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. போகட்டும். ருஷ்யா—பிரிட்டன்—பிரான்சு ஐக்கியத்துக்கு அமெரிக்கா ஆதரவளிக்கும். இதைவிட இன்றைய உலகில் பெரும்பலம் ஏற்பட முடியாது. ஆனுல் ஹிட்லர் ஒருவேளை முன்போல அக்கம்பக்கம் கை நீட்டினுல், அப்போதும் ஸ்ரீ சேம்பர்லேன் சமாதானப்பேச்சை ஆரம்பிப்பாரோ என்று பயமாயிருக்கிறது. ஹிட்லர் இனிச் சுண்டு விரலை நீட்டினுலும் விடக்கூடாது.



## இளையாற்றங்குடி கும்பாபிஷேகம்

### கண்கொள்ளாத ஒரு வைபவம்

இளையாற்றங்குடி நித்தியகல்யாணி அம்பாள் சமேத கைலாசநாதர் கும்பாபிஷேகம் சென்ற வைகாசி 14உ மிகுந்த வைபவத்துடன் நடந்தேறியது. பல்லாயிரக்கணக்கான மக்கள் கும்பாபிஷேக விமரிசைகளைக் காண வந்திருந்தனர். இப்பகுதியில் இது போன்ற வைபவத்தை எவரும் முன் கண்டிருக்க மாட்டார். மக்கள் கூட்டத்தையும், செய்திருந்த ஏற்பாடுகளையும் கண்டு வந்திருந்தோர் அனைவரும் வியந்தனர். ஏற்பாடுகளைத் தனித்தனியே ஒப்புவித்திருந்தமையால், அனைத்தும் ஒழுங்கே குற்றமற நடந்தேறின. அன்று இளையாற்றங்குடி ஒரு 'தேவேந்திரன்' பட்டினம்போலக் காட்சியளித்தது!

14உ காலையில் 6-40-க்குக் கும்பாபிஷேகம் சிறப்பாக நடந்தது. அங்கு ஸ்தூபிக்குச் சமீபமாக கோயில்மேலே சுமார் 150 ஜனங்கள் இருந்தனர். கும்பாபிஷேகம் நடக்கும்போது பல பாகங்களிலிருந்தும் சுமார் 40,000 ஜனங்கள் கண்ணுக்கு எட்டிய மட்டிலும் இருந்தார்கள். சாரணர் உதவி மிகுதியும் பாராட்டத்தக்கது.

8உ அநுக்ஞை விக்னேஸ்வர பூஜை நடந்தது. 10உ கடஸ்தாபனம்செய்து, அன்று முதல் யாகசாலை நடந்துவந்தது. ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் ஏராளமான மக்கள் யாகசாலைக்குவந்துகொண்டேயிருந்தார்கள். 13உ சுமார் 50,000 ஜனங்களுக்கு அதிகமாகவே கூடிவிட்டார்கள். யாகசாலைக் கொட்டகை ரமணீகரமாயிருந்தது. யாகசாலை மிகவும் நேர்த்தியாக நடந்தது. அவைகளை நடத்தி வைத்தவர் தேவகோட்டை ஸ்ரீ பள. செ. பழனியாண்டி செட்டியார் வகையரு. யாகசாலை நடந்த முறை மிகவும் குறிப்பிடத்தக்கது.

நகரத்தார் விடுதியில், யாகசாலை ஆரம்பத்திலிருந்தே ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு ஒவ்வொரு வேளையும் சாப்பாடு நடந்தது. 13உ பகல் முதல் நகரத்தார்களுக்கு விருந்தும் நகரத்தார் பெண்களுக்கு விருந்தும் பிராமண போஜனமும், டிரைவர்கள், வண்டிக்காரர்களுக்கு சாப்பாடும் நடந்து வந்தது.

கோயிலூர் சுவாமிகள் 12ம் தேதியே இளையாற்றங்குடி வந்துசேர்ந்தனர். அவர்களுக்கென்று தனியே அமைக்கப்பட்ட ஜாகையில் வெகு விமரிசையாக ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு ஒவ்வொரு வேளையும் அன்னம் வழங்கப்பட்டது. நகர விருந்துக்காக ஏககாலத்தில் 1500 பேர் சாப்பிடக் கூடிய கொட்டகை நான்கு அமைக்கப்பட்டிருந்தது. இதேபோல் நகரப் பெண்களுக்கும் 4 கொட்டகைகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பிராமணர்களில் ஸ்மார்த்தர்களுக்குத் தனியே ஏககாலத்தில் ஆயிரம்பேர் சாப்பிடக் கூடிய கொட்டகை அமைக்கப்பட்டிருந்தது. வைஷ்ணவர்களுக்குப் பெருமாள் கோயிலில் போஜன வசதி செய்து வைத்திருந்தார்கள்.

டிரைவர்கள், வண்டிக்காரர்கள், வேலையாட்களுக்கு பிராமண போஜன கொட்டகைக்குப் பின்னுல் தனியே 2 கொட்டகை ஏககாலத்தில் 1000 பேர் சாப்பிடக்கூடியபடி அமைக்கப்பட்டிருந்தது.

குருக்கள், வேதபாராயணம், தேவாரக்கோஷ்டி திருப்புகழ்கோஷ்டி இவர்களுக்குத் தனித்தனியே ஒவ்வொரு ஜாகையும், சமையல் வசதிகளும் சாப்பாட்டுக் கொட்டகைகளும் தனித்தனியே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

கிராமத்து ஜனங்கள் ஏராளமானவர்களுக்கு 2 இடங்களில் சாப்பாடு செய்துவைக்கப்பட்டது.

இளையாற்றங்குடிக் கோயிலைச் சேர்ந்த 7 வகுப்பு நகரத்தாரும் அவரவர்கள் தங்குவதற்குப் பெண்களுக்குத் தனியேயும் ஆண்களுக்குத் தனியேயும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் தங்கக்கூடிய கொட்டகைகள் தனித்தனியே போட்டுக் கொண்டிருந்தார்கள்.

மொத்தம் சுமார் லட்சம் ஜனங்கள் வரை கும்பாபிஷேக சமயத்திலும் சுவாமி புறப்பாடு சமயத்திலும் கூடியிருக்கலாம்.

உத்தியோகஸ்தர்கள் பலர், அதிகாரிகள் பலர் வந்திருந்தனர். ராமநாதபுரம் டிப்டி ஸுபரின்டென்ட், திருப்பத்தூர் தாலுகா மாஜிஸ்டிரேட், காரைக்குடி சர்க்கிள் இன்ஸ்பெக்டர், ரிசர்வ் போலீஸ், லோகல் போலீஸ் இவர்கள் ஏராளமாக வந்திருந்து பொதுமக்களுக்குத் தொண்டு புரிந்தார்கள். இவர்களுக்கும் தனித்தனியே ஜாகைகளும், சாப்பாடு வசதிகளும் ஏற்படுத்தப்பட்டிருந்தது.

இவ்வளவு பெரிய கூட்டத்துக்குச் சாரணர் செய்த தொண்டு பாராட்டத்தக்கது. எங்கேனும் திருட்டுப் போனதாக இல்லை. ஒன்றிரண்டு திருட்டு நடந்ததை உடனே சாரணர்கள் கண்டுபிடித்துத் திருட்டுப் போன சொத்தை வாங்கிக்கொடுத்து விட்டார்கள். இரவு பகல் தூக்கமில்லாமல் மிக நன்ருக உழைத்திருக்கிருர்கள் தேவஸ்தானம் டிரஸ்டிகள், உதவிக்குவந்த ஒவ்வொரு ஊர் சாரணர் சங்கத்துக்கும் ஒவ்வொரு கப்பும், சர்டிபிகேட்டும் தர உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது.

வேறு வசதியான கட்டிடங்கள் இல்லாமையால், எல்லாமுமே கீத்துக் கொட்டகைகள் போடவேண்டி ஏற்பட்டதால் ரூ 10,000-க்குமேல் இவ்வகையில் கூலிக்காகச் செலவிட்டிருக்கிருர்கள். கீத்துக்கொட்டகை அதிகமாயிருந்தபடியால், வாணக்காட்சிகளை விநோதமான முறையில் செய்யவில்லை. அவுட்டும், அதிர்வெடியுந் தவிர வேறு வாணங்க ளில்லை.

கும்பாபிஷேகத்துக்குச் சுமார் ரூ. 75,000 செலவாகி யிருக்குமென்று மதிப்பிடப்படுகிறது. சுவாமி புறப்பாட்டுக்கு காரைக்குடி 16 ஊர் வட்டகை,கிழவட்டகை,கிழபத்தூர் நீண்டகரைப் பிரிவு ஊர்களிலுள்ள கழநிவாசல் குடி நகரத்தார் விசாரணை ஏற்றுக்கொண்டார்கள்.

சுவாமி புறப்பாடு இரவு 10-30 மணிக்கு ஆரம்பமாயிற்று. கோயிலில் வெள்ளி வாகனங்களில்லாமையால் வெளியூர்களிலிருந்து வெள்ளி வாகனங்கள் கொண்டுவந்து மிக விமரிசையாகப் புறப்பாடு செய்து வைத்தார்கள். சுவாமிக்கு ஏராளமான வைர நகைகள் சாத்தியிருந்தார்கள். காரைக்குடி கொப்புடையம்மனுக்குச் சாத்தும் நகைகளைப் போல் பன்மடங்கு அதிகமாகப் பஞ்சமூர்த்திகளுக்கும் வைரத்தாலேயே சாத்தப்பட்டிருந்தது. வைரநகைகளின் மதிப்பு 30 லட்சத்துக்கு அதிகமாக இருக்குமென்று சொல்லப்படுகிறது. எங்குமில்லாத புதுமாதிரியான வைரக் காப்புகள், மாகமாலை இரண்டு, அம்பாளுக்கு சாத்தப்பட்டிருந்தது. இந்த மாக மாலையையும் நகைகளின் மிகுதியையும் பற்றிப் பேசாதார் யாருமில்லை.

சுவாமி 15உ காலை 7½ மணிக்குச் சேர்க்கைக்கு வந்தது. சுவாமி புறப்பட்டபொழுது, ஜனங்கள் நெருக்கடியில்லாமல் பார்க்கத் தகுந்த ஏற்பாடுகளை, சாரணர்களைக் கொண்டு சுவாமி புறப்பாட்டு விசாரணைதார் செய்திருந்தார்கள்.

### சுவாமி புறப்பாடு

பொய் யானைக்குப்பின் நிஜயானை இருந்தது.பிறகுபொய் ஒட்டை! பொய் யானைக்கு எதிரில் நின்று கண்களைத் திறந்து நன்ருகப் பார்த்தாலுங்கூட அதைப் பொய் யானை என்று சொல்ல முடியாமலிருந்தது.

பிறகு பொய்க்குதிரை நிஜநாட்டியக் குதிரை ஐந்து, கரகம். வீருசாமி நாதசுரம், ஸ்பெஷல் தவுல் மீனுட்சி சுந்தரம் & சிதம்பரம் இளமையாக்கினுர் கோயில் ராதாகிருஷ்ணன் நாதசுர செட்.

தஞ்சாவூர் பாலகிருஷ்ணன் மகன் குருசாமி செட் பாண்டு வாத்தியம்.

கும்பகோணம் சாரநாயகி & பட்டு சதிர். சுவாமி புறப்பாட்டுக்குக் கூடவேவந்து சதிர் ஆடினுர்கள்.

### சுவாமிக்குப் பின்னுல்

1) ருக்வேத பாராயணம் (2) யசுர்வேத பாராயணம், (3) சாமவேத பாராயணம், (4) தேவாரக் கோஷ்டி (5) ஹரிகதா காலட்சேபக் கோஷ்டி (6) ஹரிகர சிவம் சிவநாம சங்கீர்த்தனம் (7) திருப்புகழ் கோஷ்டி

மேல வீதி வடகோடியில் பொய் யானை நிற்கிறபோது, திருப்புகழ்க் கோஷ்டி கோயில் வாசலில் நின்றது என்ருல் எவ்வளவு கோஷ்டிகள் எனப் பார்த்துக் கொள்ளுங்களேன்!

சுவாமி புறப்பாட்டுக்குப் பூரண பொறுப்பேற்று நடத்தியவர்கள் ஒரு சிலரே. அவர்களில்முக்கியமானவர்கள் ஸ்ரீமான்கள்: சித. நா. கி. நாராயணன் செட்டியார், காரைக்குடி அ.மு.க.மு. சித. முத்துக்கருப்பன் செட்டியார், அ.மு.க.மு.க. கருப்பன் செட்டியார், சிவ.கி.லெ.ஜகந்நாதன்செட்டியார், அ.மு.க.மு.அள. முத்தய்யா செட்டியார், ஆ. மு. ஆறு. பழநியப்ப செட்டியார், செ.உ.ராம. செட்டியப்ப செட்டியார், குப. சு. அ. மெ. மெய்யப்ப செட்டியார், ஷண்முகநாதபுரம் நா. மு. அ. ராம. ராமசாமி செட்டியார், பள்ளத்தூர் கு. அ. கு. குமரப்ப செட்டியார், காரைக்குடி அ. சு. பள. சுப்பய்யா செட்டியார், அள. சித. சொ. தெய்வராயன் செட்டியார், ராம. நா. முரு. நாராயணன் செட்டியார், வெ. ராம. வெ. வெ. சினிவாசன் செட்டியார் ஆவர்.

சுவாமி அலங்காரத்தில் காரைக்குடி ஸ்ரீ பள. அ. பள. அண்ணுமலைச் செட்டியார், ஸ்ரீ நா. கு. ராமநாதன் செட்டியார், ஸ்ரீ அ. ராம ராம. இராமநாதன் செட்டியார், ஸ்ரீ முத்து அரு. சித. அரு. அருணுசலஞ் செட்டியார், ஸ்ரீ முத்து அரு. சா. அருணுசலஞ் செட்டியார், பள்ளத்தூர் ஸ்ரீ ராம. சித. லெ. லெட்சுமணன் செட்டியார், ஆத்தங்குடி ஸ்ரீ ராம. ஆ. ராம. குன்றுக்குடியான் செட்டியார், கடியாபட்டி ஸ்ரீ சா. பள. முருகப்ப செட்டியார் கலந்துகொண்டு அலங்காரத்தைச் சிறப்பித்தனர்.

சுவாமி புறப்பாட்டில் கடைசிவரையில் கூடவேயிருந்து, நகைகள் பிரிக்கும்வரை உதவிபுரிந்தனர்.

(16-ம் பக்கம் பார்க்க)

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திலிருந்து பினங்குக்குப் புறப்படும்

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜுலா | 17—6—39 |
| ரோனு | 1—7—39 |

### வருதல்

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினத்துக்கு வரும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜுலா | 8—6—39 |
| ரோனு | 22—6—39 |

## சென்னை மார்க்கெட்

சென்னை, மே. 30—

| | |
|---|---|
| சவரன் மொத்தம் | 23-12—3 |
| ,, சில்லரை | 23-12—9 |
| பம்பாய் ஆலைத் தங்கம் | 37—2—0 |
| ,, தவணை | 37—0—6 |
| மூசை தோலா 1-க்கு | 37—9—6 |
| வெள்ளி (ரெடி) | 53-12—0 |
| ,, தவணை | 53-11—0 |
| ,, 1 ரூபாய் எடை | 0—9—0 |

## ரெங்கூன்

மே. 24—

### நெல்

| | |
|---|---|
| நசைன் நெல் | 97—98 |
| கவ்ஜின் மீடோன் | 100-101 |

### புது அரிசி

| | |
|---|---|
| பெரியமில் ஸ்பெஷல் ரூ. | 227—0—0 |
| சிறிய மில் நசைன் | 236—0—0 |
| புழுங்கல் அரிசி | 260—0—0 |
| மில்ச்சார் | 255—0—0 |

## பினங்கு

பினங்கு, மார். 25—

| | |
|---|---|
| தவணை வட்டி | 0-4-0 |
| ரப்பர் பிக்கல் 1-க்கு | $ 36-50 |
| ஈயம் ,, ,, | $ 110-63 |
| கொப்பரா ,, | $ 3-65 |
| உண்டியல் விலை மதருஸ் ரெங்கூன் | ரூ. 154 7 4 |
| ,, மைடான் லிவ்டர் | 101 3/4 |
| ,, செய்கோன் டாலர் | 203 1/4 |
| ,, பேங்காக் டிக்கல் | 124 7/8 |

## சிங்கப்பூர்

சிங்கப்பூர், மே. 13—

தவணைவட்டி

| | |
|---|---|
| பிரமாதி—சித்திரை மீ | 0-3-9 |
| ரப்பர் விலை பவுண்டு 1-க்கு | 27-½ |
| ஈயம் விலை பிக்கல் 1-க்கு | $ 114-25 |
| கொப்பரா காய்ந்தது | $ 3.90 |
| கொப்பரா கலப்பு | $ 3.60 |
| உண்டியல்விலை இந்தியாவுக்கு | 155-5 |
| ,, செய்கோனுக்கு | 203 3/8 |

## செய்கோன்

செய்கோன், மே. 20—

| | |
|---|---|
| தவணை வட்டி வைகாசி மீ | 0-4-0 |
| நெல் விலை பிக்கல் 1-க்கு | $ 4·40-லிருந்து $ 4·45 |

### உண்டியல் விலை

| | |
|---|---|
| இந்தியாவுக்கு $ 100-க்கு ரூ. | 75 ½ |
| சிங்கப்பூருக்கு ,, | $ 48 ½ |

## உள்ளூர் சினிமாக்கள்

**ஸ்ரீ ராமவிலாஸம்:—**
"பஞ்சாப் கேசரி" என்னும் தமிழ்ப் படம் நடக்கிறது.

**ஸ்ரீ கிருஷ்ணு:—**
"தியாக பூமி" என்ற தமிழ்ப் படம் நடக்கின்றது.

**ஸ்ரீ நடராஜா:—**
"பிளேக் ஆப் ஸ்காட்லண்யார்டு" என்னும் இங்கிலீஷ் சீரியல் நடக்கிறது.

**ஸ்ரீ ஷண்முகவிலாஸ் தியேட்டரில்:—**
14-5-39 முதல் "சிருஷ்ணலீலா"

## காரைக்குடி எஸ். எம். எஸ். ஹைஸ்கூல்

நடந்த ஸ்கூல்பைனல் பரீட்சையில் கீழ்க்கண்டவர்கள் தேறி யிருக்கிறார்கள்:

1. எஸ். சிவசுப்பிரமணியன்
2. வி. கிருஷ்ணமாச்சாரி
3. எஸ். கணபதிசுப்பிரமணியன்
4. வ. ஸ்ரீனிவாசன்
5. ஆர். செல்லய்யா
6. பி. வயிரவன்
7. எல். என். ராமசாமி
8. எம். ராமமூர்த்தி
9. என். பஞ்சாபகேசன்
10. வி. சந்திரசேகரன்
11. எஸ். ரங்கராஜன்
12. டி. சீனிவாசகோபாலன்
13. சி. சுந்தரராகவன்
14. வி. மாமுண்டி

## கழநிவாசல் பஞ்சாயத் கோர்ட்

தேவகோட்டை கவர்ன்மெண்ட் ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் உத்தரவுக்கிணங்க, 28—5-39 உ ஞாயிற்றுக்கிழமை காலை 11 மணிக்கு காரைக்குடி பெஞ்சு கோர்ட் கட்டிடத்தில், காரைக்குடி கழநிவாசல் பஞ்சாயத் கோர்ட் மெம்பர்கள் 7 பேர்களும் கூடி ஷை கோர்ட்டுக்குத் தலைவரைத் தேர்ந்தெடுத்தார்கள். ஸ்ரீ தாவுத் பாக்ஷா ராவுத்தர் ஸ்ரீ மெ. சு. கி. தண்ணீர் மலையான் செட்டியாரை சேர்மனாகப் பிரேரேபித்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணய்யர் அதை ஆமோதித்தார். கோர்ட்டுக்குத் தலைவராக ஸ்ரீ ஆர். வெங்கிட்ராமய்யரை ஸ்ரீ தாவுத் பாக்ஷா பிரேரேபிக்க, ஸ்ரீ ராமகிருஷ்ணய்யர் ஆமோதிக்க, ஸ்ரீ ஆர். வெங்கிட்ராமய்யர் ஏகமனதாய்த் தேர்ந்தெடுக்கப் பெற்றார். அக்ராசனர் இதை அறிவித்தார். ரிக்கார்டு மூலம் ரெவின்யூ டிவிஷனல் ஆபீசருக்குத் தெரிவிக்கப் பட்டுள்ளது.

## அரசியல் பள்ளிக்கூடம்

நாகையில் ஆரம்பம்

நாளது ஜூன் மாதம் முதல்வாரத்திலிருந்து 15 தினங்களுக்கு மட்டும் நாகபட்டணத்திலிருந்து ஒரு ராஜீயப் பொருளாதாரப் பள்ளிக்கூடத்தை நடத்துவதென்று தென் தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானத்திற்கிணங்க ஏற்பாடு செய்துவருகிறோம்.

இந்தப் பள்ளிக்கூடத்திற்கு இந்த ஜில்லாவிலிருந்து மட்டும் 25 மாணக்கர்கள் வந்து சேர ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

இந்த ஜில்லாவைத் தவிர தமிழ்நாட்டின் வெளியிடங்களிலிருந்து வந்து சேர விரும்பும் மாணக்கர்கள் தங்கள் அபேக்ஷையை நாளது 4-ந்தேதிக்குள் எங்களுக்குத்தெரிவிக்கவேண்டும். ஆதிதிராவிடர்களுக்கும் பெண்களுக்கும் விசேஷ சலுகை காட்டப்படும். மாணக்கர்கள் ஒவ்வொருவரும் அவசியம் காங்கிரஸ்காரர்களாக இருக்க வேண்டும். வெளி ஜில்லா மாணக்கர்களிடமிருந்து வரும் மனுக்கள் பரிசீலனை செய்யப்பட்டு 6-ந்தேதி தகவல் தெரிவிக்கப்படும். அப்படிப் பட்ட மாணக்கர்கள் ரூ 4 சாப்பாட்டிற்காக செலுத்த வேண்டும். இந்தத் தொகை செலுத்த முடியாதவர்கள் தங்கள் கருத்தை ஆரம்பத்திலேயே தெரிவிக்கலாம்.

விலாசம்:—
ஜி. கோவிந்தசாமி, ஆர்கனைசர்,
அரசியல் பள்ளிக்கூடம்
புதுரோடு, நாகை.

# அதிசயச் செய்திகள்

## துணிகளில் தீப்பிடிக்காமலிருக்க ஒரு திராவகம்— சமுத்திர ஜலத்திலிருந்து தங்கம்— கண்ணுக்குத்தெரியாதபடி எழுதும் இங்கி—

★

சமுத்திரத்தில் 32 ரசாயன மூலப் பொருள்கள் இருப்பதாக ஒரு பிரபல ஜர்மானியப் பத்திரிகை வெளியிட்டிருக்கிறது.

கடல்நீரில் ஒவ்வொரு டன் தண்ணீரிலும் ஒரு ஷில்லிங் பெறுமானமுள்ள உலோகங்கள் இருக்கின்றனவாம். உப்பு, புரோமைட், அயோடின், செம்பு, வெள்ளி, தங்கம், ரேடியம் முதலியவை இருக்கின்றனவாம்.

அப்படியானல் சமுத்திரத்திலுள்ள ஏராளமான தண்ணீரிலிருந்து தங்கம் எடுக்கலாமே என்று நினைத்துவிடக் கூடாது. ஒரு டன் கடல் நீரில் கிடைக்கக்கூடிய தங்கம் மிக மிகச் சொற்பம். அதாவது ஒரு கிராம் தங்கத்தைப் பத்து லட்சம் பங்குகளாகப்போட்டால், எவ்வளவு குறைந்த பங்கு தங்கமாக ஆகுமோ, அப்படி 4 பங்குகள்தான் கிடைக்கும்!

புரோமைட் எடுப்பது சுலபம். லாபகரமானதாகவும் இருக்கும். ஒரு அமெரிக்கக் கம்பெனி 75 லட்சம் டன் தண்ணீரில் 10,000 கிலோகிராம் புரோமைட் தயாரிக்கிறது.

### கண்ணுக்குத் தெரியாத இங்கி

ஸ்காட்லந்தில் ஒரு பொருட்காட்சியில், 1745-ம் வருடத்துச் சாசனம் ஒன்று இருக்கிறது. இங்கிலாந்துச் சிம்மாசனம் தனக்குத்தான் சொந்தமென்று கோரிய ஸ்டுவர்ட் பரம்பரையைச் சேர்ந்த பிரின்ஸ் சார்லீயைப் பிடித்துத் தருகிறவருக்குப் பரிசளிப்பதாகக் கூறிய சாசனம் அது.

இந்த சாசனத்துக்குப் பின்னல், சுமார் 200 ஆண்டுகளுக்குப் பின், கையால் எழுதப்பட்ட ஒரு செய்தி ஒவ்வொரு எழுத்தாகப் புலனுகிக் கொண்டிருக்கின்றது.

இரகசியச் செய்திகளைக் கண்ணுக்குத்தெரியாதபடி இங்கியால்எழுதுகிற பழக்கம் ஆதிகாலத்துப் பள்ளிக்கூடப் பையன்களால் கையாளப்பட்டு, தலைமுறை தலைமுறையாகக் கையாளப் பட்டு வருகின்றது.

1745-ம் வருடத்தில் அப்படி உபயோகப்படுத்தப்பட்ட இங்கி எப்படி செய்யப்பட்டதென்று விளங்கவில்லை. ஆனல் பல திராவகப் பொருள்களை இதற்கு உபயோகிக்கலாம்.

சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்திருப்பது பால். கிளேஸ் அல்லாத கடிதத்தில் பாலில் தோய்த்து ஏதேனும் எழுதினல், பிறகு அதைப் படிக்க வேண்டுமாயின் சிறிது உஷ்ணத்தில் காட்டவேண்டும்.

கண்ணுக்குத் தெரியாத இன்னோர் 'இங்கி' எலுமிச்சம் பழ ரசம்.

கோபால்ட் குளோரைட் எனும் திராவகத்தில் தோய்த்து பிங்க் காகிதத்தில் எழுதினல் அக்காகிதத்தை உஷ்ணப்படுத்தியபின் எழுத்துக்கள் நீலநிறமுடையதாயிருக்கும். குளிர்ந்த காற்றில் நீல நிறம் மெதுவாக மறைந்துபோகும்.

### பாண்டோ சைக்கிள்

இப் பைசைக்கிளுக்கு ஓட்டுகிறவர் தேவை யில்லை. மணிக்கு28மைல்வீதம் ஓடும். கம்பிகளும் வேறு ஆதரவுகளுமில்லாமல் தானகவே ஓடுகிற இந்நாதனத் துவிச்சக்கரவண்டி நியூயார்க், உலகப் பொருட்காட்சியில் வைக்கப் பட்டிருக்கிறது. இதற்கு 'பாண்டோ சைக்கிள்' என்று பெயர். ஒரு போட்டோ எலெக்ட்ரிக் ஸெல் இதை நிர்வகிக்கிறது. முன் மட்கார்டில் போதுமான அளவு விழுந்துவிடாதபடி கனம் வைக்கப்பட்டிருக்கிறது. கைப்பிடியையும் அதுவே திருப்பிக் கொள்ளும்.

இதை ஒரு வருஷத்துக்கு நிற்காமலே ஓடும்படி செய்யலாம். தினந்தோறும் 400 மைல் விகிதம் இது போய்க்கொண்டிருக்குமாம்!

### நெருப்பில் போட்டால் வேகாது

நெருப்பில் போட்டால் வெந்து போகக்கூடிய துணிமணிகளைப்போன்ற சாமான்களை, நெருப்புக்கும் நிற்கின்றாற்போல் செய்வதற்கு தேவன்ஷயர் வாசியாகிய ஸ்ரீ வி. ஜே. ட்ரூரோ பல்லாண்டுகளாய்ப் பிரயாசைப்பட்டு ஒரு திராவகத்தைக் கண்டுபிடித்திருக்கிறார்.

திராவகப் பொருளில் இன்னின்ன சேர்ந்திருக்கின்றன என்பதை இன்னும் அவர் இரகசியமாகவே வைத்துக் கொண்டிருக்கிறார். ஆனல் சர்க்கார் அதிகாரிகள் பலர் முன்னிலையிலும், போலீசு அதிகாரிகள் முன்பும், இன்ஷியூரன்ஸ் பிரபலஸ்தர் முன்பும் அவர் நெருப்பில் துணிமணிகளையும் மரக்கட்டைகளையும் போட்டுக்காட்டினர். துணிகளில் நெருப்புப் பிடிக்கவில்லை. மரக்கட்டைகள் அப்படியே கிடந்தன!

ஸ்ரீ ட்ரூரோ சதாரண உடைகளைத் தாம் தரித்துக் கொண்டிருந்தார். ஆனல், அவருடைய திராவகப்பொருளில் இவை நனைக்கப்பட்டிருந்தன. அந்த உடைகளுடன், எதிரில் பெட்ரோலை ஊற்றி எரிய வைத்த ஒரு மரக் குடிசையில் நடுவில் காயம் படாமல் நடந்து சென்றார்!

மற்றும் ஒரு பழைய ஆகாய விமானத்தை எரிய வைத்து, தாம் அதில் புகுந்து, தம்முடைய ஆடைகளில் தீப்பிடிக்காதபடி விமானத்திலிருந்தவற்றை மீட்டுக் கொண்டு வந்தார்!


ஜீவ சக்தி,

சோர்வடைந்த தாதுக்களை உயிர்ப்பித்து, இரத்தத்தைச் சுத்தி செய்து, தேகத்தில் ஜீவசக்தியையும் முகத்தில் காந்தியையும் தவழச் செய்வது பண்டிட் D. கோபாலாச்சார்லுவின் "ஜீவாம்ருதம்" ஒன்றே. வலிவிழந்த நரம்புகளுக்குப் புத்துயிர் அளித்து, வாழ்க்கையை இன்பமுறச் செய்வதில் ஜீவாம்ருதத்திற்கு இணை வேறில்லை.

எல்லா மருந்து ஷாப்புகளிலும் கிடைக்கும்
கேட்லாக் இனம்!

VAIDYARATNA PANDIT D. GOPALACHARLU'S
JEEVAMRUTHAM NECTAR FOR LIFE
THE BEST NERVINE TONIC
AYURVEDASRAMAM MADRAS

ஜீவாம்ருதம்

ஆயுர்வேதாஸ்ரமம், த. பெ. 287, சென்னை.


## மதிப்புரை

### திரிபுரி காங்கிரஸ்

[நவயுகப் பிரசுராலயத்தின் வெளியீடு—ஆசிரியர்: ஸ்ரீ சா. கணேசன், காரைக்குடி—கிடைக்குமிடம்: பாரதி பிக்சர் பாலெஸ், காரைக்குடி—விலை: அணு 6.]

ஆசிரியர் ஸ்ரீ சா. கணேசன் திரிபுரிக் காங்கிரஸ் பிரதிநிதியாகச் சென்றிருந்தார். திரிபுரியை நோக்கிப் புறப்பட்டதிலிருந்து, அதாவது திரிபுரிக்குச் செல்லும் இரயில் வண்டிகளில் நடந்த சம்பாஷணைகளிலிருந்து அவர் 'திரிபுரிகாங்கிரஸ்' எனும் இந்நூலில் எழுதியிருக்கிறார். இரயில் வண்டிச் சம்பாஷணைகள் மிக ருசிகரமாயிருக்கின்றன.

திரிபுரியில் நடந்த சம்பவங்களை ஆசிரியர் ஸ்ரீ கணேசன் மிக அழகாகத் திரட்டித் தந்திருக்கிறார். உதாரணமாக ராஜகோட்டில் மகாத்மா துவக்கிய உண்ணவிரதத்தை அவர் முடித்துக்கொண்டு, கிச்சிலிப் பழச்சாறு உட்கொண்டதாக, ஸ்ரீ நேரு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் அறிவித்த நற் செய்தி கேட்டு மக்கள் உளம் பூரித்தமையை

'வேதியர் தமைத் தொழும்,
வேந்தரைத் தொழும்,
தாதியர் தமைத் தொழும்,
தன்னையே தொழும்,
ஏதுமொன் றுணர் கிலன்
இருக்கும், நிற்குமால்,
காதலென் றதுவு மோர்
கள்ளின் தேற்றிற்றே!'

என்று ராமன் வரவுகேட்ட பரதன் நிலையைக் கம்பர் சித்தரித்துள்ளாரே, அதனை நினைவூட்டி ஸ்ரீ கணேசன் ஒப்பிட்டுக் கூறியிருத்தல் மிகுந்த சுவையை யளிக்கின்றது.

நிகழ்ந்த சம்பவங்களைத் நிறம்பட எடுத்துக்காட்டி யிருப்பதுடன், வரவேற்புக் கமிட்டித் தலைவர் பிரசங்கம், ராஷ்ட்ரபதி போஸ் பிரசங்கம், பந்த் தீர்மான வாசகம், அவர் பிரசங்கங்கள், ராஜாஜி பிரசங்கங்கள், ஜவஹர் சுதேசிப் பொருட்காட்சிப் பிரசங்கம் தீர்மானங்களின் விபரம் ஆகியவைகளையும் இந்நூலில் தந்துள்ளார். இவை மட்டுமல்ல. கல்கத்தாவில் பாபு ராஜேந்திரர் தலைமைப் பதவியை ஏற்றுக் கொண்டது வரையிலும் இந்நூலில் அவர் சேர்த்துள்ளது மிகப் பொருத்தமாகும். ஏனெனில் தலைமைப் பதவித் தேர்தல் குழப்பம் ராஜேந்திர பாபு ராஷ்ட்ரபதியாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகுதான் ஒருவாறு அடங்கிற் றென்னலாம்.

132 பக்கங்களையுடைய இத் 'திரிபுரி காங்கிரஸ்' நூல் தற்காலக் காங்கிரஸ் நிலையையும், தலைமையிலுள்ளவர்களின் தாராதரத்தையும் உணர்த்தப் போதிய சாதனமாகும். ஆசிரியர் எளிய தமிழ் எழுத்தாளர் என்பது நூலின் ஆரம்பத்திலேயே விளங்கும்.



# தேகப் பயிற்சியே யோகப் பயிற்சி

டேலுக்கான்சனில் அகில மலாயா செட்டியார் இளைஞர் சங்கக் கூட்டத்தில் ஸ்ரீ ராம. சம்பந்தன் பேசியது:—

★

நமது இளைஞர் தலைவர் ஸ்ரீ அரு. அவர்கள் இளைஞர்களைப் பண்படுத்துவதில் சிறந்தவர்கள். எங்குமே பேசியறியாத எனக்கு ஊக்கமூட்டிப் பேசும்படி செய்து விட்டார்கள். அவர்கள் பணித்த படியும், சகோதரர்கள் நலங்கருதியும் ஒரு சில சொல்லுவது கடமையாகக் கொண்டு நான் அநுபவ வாயிலாக நன்கறிந்த உடற் பயிற்சியைப் பற்றி 'உடம்பும் உயிரும்' என்ற தலைப்பில் கொஞ்சம் பேசுகிறேன்:

பயிற்சியைப் பற்றி, பலர் பேசக் கேட்டிருப்பீர்கள். பழைய விஷயத்தையே திரும்பத் திரும்பக் கேட்டால் ரஸிக்காதுதான்; என்றாலும், கேட்டபடி நடக்கும்வரை சொல்லியே தீரவேண்டுமல்லவா?

உடம்புக்கும் உயிருக்கும்மிகநெருங்கிய சம்பந்தமுண்டு. இரண்டும் ஒன்றேபோன்றது. வலுவான உடம்பின் உயிர் வலுவாக இருக்கும், வலுவில்லா உடம்பிலும் எலும்புந் தோலுமாகஉள்ள உடம்பிலும் உள்ள உயிரை வலுவானதாகச்செய்யாவிட்டால் சிறு ஆபத்துகள் கூட பெரியதாகத் தோன்றும். உடம்பையும் உயிரையும் வலுவானதாக்கிப் பிரகாசம் பொருந்தியதாகச் செய்ய வேண்டுமானல் தினமும் கொஞ்சநேரம் பயிற்சி செய்ய வேண்டும். காலையோ, அன்றி மாலையோ, சௌகரியப்படி சிறிது நேரம் பயிற்சிசெய்ய வேண்டியதை தினக்கடமைகளில் ஒன்றாகக் கொள்ள வேண்டும். பயிற்சிசெய்ய ஆரம்பித்த உடனேயே உடம்பு உருண்டு திரண்டு வரவில்லையென்று ஒரு சிலர் ஒரு வாரத்திலும்,மற்றும்சிலர் ஒன்றிரண்டு நாட்களிலும் நிறுத்தி விடுகின்றார்கள். இது, அரசமரத்தைப் பிரதட்சணம் வந்துகொண்டிருக்கும் போதே அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்துக் கொண்ட கதையாக இருக்கிறது. தொடர்ச்சியாகப் பழகிவந்தால் கட்டாயம் பலன் கிடைக்கும். சோம்பல் நீங்கும். ஜீரணக் கருவிகள் ஒழுங்காக வேலை செய்யும். மனம் தைரியமாயிருக்கும். சுறுசுறுப்புடன் வேலை நடக்கும்.

பீம பலமும், அசுர உடம்பும் நமக்கு வேண்டிய அவசியமில்லை. தன்னைக் காத்துக்கொள்ளப் போதிய பலம் அவசியம் வேண்டும். நோயில்லாத அழகான உடம்பு தேகப்பயிற்சியினல் கிடைக்கும். நமது முன்னோர்கள் நல் வாழ்வு வாழ்ந்தார்கள். எண்பது வயதிலும் இல்லறவின்பம் நுகர்ந்தார்கள். குழந்தை பெற்றார்கள். இவைகட்கு காரணம் உடல்வலுவேயல்லவா? திருக்கோவில் வலம் வருதல், சூரிய நமஸ்காரம், சமீபத்தில் உள்ள ஊர்களுக்கு கால்நடைப் பயணம் முதலியவற்றால் உடல்வலுப் பெற்றார்கள்.

நமது நாட்டு உடல் அழகர் ஸ்ரீ கே. வி. ஐயரவர்களின் பயிற்சிப் பாடங்கள் உடம்பை அழகுபடுத்தக் கூடியவைகள், ஸாண்டோ சோம். அவர்களுடைய பயிற்சிகள் ஆரம்ப சாதகர்களுக்கு மிக நல்லன. இந்த இடத்தில் நமது சோம. அவர்களைப் பற்றி சிறிது சொல்ல வேண்டியதிருக்கிறது. ஸாண்டோ சோம. அவர்கள் நமது இளைஞர்களுக்கு, வலுவான உடம்புகள் ஏற்படவேண்டும் என்று தேகப் பயிற்சியைப்பற்றி அபரிமிதமாகப் பிரசாரம் செய்தார்கள். எதிர்பார்த்த அளவு பலனில்லை. இதே பிரசாரத்தை வேறொரு நாட்டில் செய்திருந்தால் ஒவ்வொருவரும் ஒவ்வொரு "ஸாண்டோ" ஆக ஆகியிருப்பர் என்பது என் நினைப்பு.

இன்னார்தான் பயிற்சி செய்ய வேண்டுமென்ப தில்லை. இருந்த இடத்திலேயே வேலை செய்யும் நம்மவருக்கும் பயிற்சி மிக முக்கியம்.

உடம்பிலே நோய் வருவதற்கு முக்கிய காரணம், வயிற்றில் ஏற்படும் கோளாறு, என்று காந்தியடிகள் தமது "ஆரோக்கியவழி" என்ற நூலில் கூறியிருக்கின்றார்கள். வயிற்றுக் கோளாறுகளைத் தீர்த்து மலக்குடலைச் சுத்தி செய்து தொந்தி விழுகாமல் செய்யும் மருந்து தேகப் பயிற்சி. பைசா செலவில்லாத இவ்வுயர்ந்த மருந்தை உபயோகிப்பதனல் அபூர்வமான பலன் கிடைக்கும்.

தேகப்பயிற்சியே யோகப்பயிற்சிக்கும் அடிப்படையானது. இதில் அநுபோகம் பெற்றிருந்தால் யோகப் பயிற்சி செய்யுங்கால் சிரமம் தோற்றாது. மனதைக் கட்டுப்படுத்தி இச்சை எழா வண்ணம் தேகப் பயிற்சியினல் செய்து கொள்ளலாம்.

"உடம்பாரழியின் உயிரா ரழிவர்
உடம்பை வளர்த்தேன் உயிர்
[வளர்த்தேனே"

என்பது திருமூலர் வாக்கு. எனவே யாவரும் இறைவன் உறை விடமான நமது தேகத்தைப் பரிசுத்தமாகவும், பலமான கோயிலாகவும் கட்டிக்கொள்ள உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

## செய்கோன்

### இந்தோ சைனு நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கம்

7—5—39 காலை இந்தோசைனு நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கத்து ஒன்பதாவது ஆண்டு மூன்றாவது நிர்வாக சபைக் கூட்டம் சங்க நிலையத்தில் தலைவர் திரு. வெ. வீர. கா. மு. சுப்பையா செட்டியார் தலைமையில் கூடியது.

ஏப்ரல் மாதத்து சங்கத்தின் நடவடிக்கை விபரங்களும் கணக்கு விபரங்களும் வாசித்துக் காண்பித்து அங்கீகரிக்கப்பெற்றன.

7—4—39ந் தேதி அரசாங்கப்படி இந்த சங்கத்துக்கு நீதி உரிமை அளித்து வழங்கியிருப்பதற்காக சங்கத்தின் நன்றியை கவர்னர் ஜெனரலுக்கும், கவர்னருக்கும் தெரிவிக்கிறதென தீர்மானிக்கப்பெற்றது.

சங்கத்து கிளார்க்குக்கு நடந்துவருகிற சம்பளத்திலிருந்து மாதம் ஒன்றுக்கு ரிங்கி 3/- 1—5—39லிருந்து சேர்த்துக் கொடுக்கிறதென தீர்மானிக்கப்பெற்றது.

### தேவகோட்டை சரஸ்வதி வாசகசாலை

24—5—39 புதன்கிழமை மாலை உயர் திரு அ. ச. ஞானசம்பந்தன் "தமிழர் நாகரீகம்" என்னும் பொருள் பற்றி விரிவுரையாற்றினர்.


இது மின்சார விளக்குகள் நிறைந்த காலம். எந்த ஊரிலும் மின்சார சக்தி கொண்டு விளக்குகளை ஏற்றுகின்றனர்; எரிக்கின்றனர்.

அதிகப் பிரகாசத்தை உடைய அவ்விளக்குகள் வீட்டில் நிறைந்திருந்தாலும், கெட்டிக்காரராய் உள்ளவர்கள் இரண்டு மூன்று கிரசனயில் விளக்கேனும் தயாராக வைத்திருப்பார்கள் எதற்காக?

மிகப் பிரகாசமான மின்சார விளக்குகள் இருந்தாலும் சில சமயங்களில் திடீரென அணைந்து தாங்க முடியா இருளை வீட்டிற்குள் கொண்டு வந்து விடுகிறது. அவ்விருளை அம்மின்சார விளக்குகள் மறுபடியும் தோன்றிப் போக்குமளவும், இடையிட்ட காலத்தில் வேறு விளக்குகள் பெரும் உதவியாக இருக்கின்றன. அதே போன்று ஒரு குடும்பம் எவ்வளவு க்ஷேமமாக இருந்த போதிலும், அதில் முக்கியஸ்தர் இறப்பாராயின், அவர் பொறுப்பை ஏற்க அக்குடும்பத்திலுதித்த ஒரு இளைஞர் வயதடையும் வரை இடைக்காலத்தில் ஏற்படக்கூடிய இருளை (கஷ்டங்களை) நிவர்த்திப்பது லைப் இன்ஷ்யூரன்ஸ். அதை இன்றே செய்யுங்கள். எங்களிடமே செய்யுங்கள்.

மிட்லண்டு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி, லிமிடெட்,

போஸ்ட் பாக்ஸ் 276, :: :: லோன்ஸ்குயர்
டெலிபோன் 3006, :: :: பிராட்வே, சென்னை.

## இமயமலையில் சிவபெருமானின் பனிச்சிலை

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

ணீர் ருசிக்கு அவ்வளவு நன்ருயிராது. பார்ப்பதற்குச் சுண்ணாம்புத் தண்ணீர் போலிருக்கும். இந்த இடத்தில் தண்ணீர் மெதுவாகவே போகும்.

### குகை

பஞ்சதாணிப் பக்கத்தில் ஒரு மணி நேர ஓய்வு எடுத்துக்கொண்டு, 4½ மணி கடினமான பாதையைத் தள்ளாடிக் கடந்துவிட்டால், அமரநாத குகையை அடைந்துவிடுவோம். இக் குகையில் போய்ச் சேருவதற்கு முன், அரை மணி நேரம் பனியில்தான் நடந்துபோகவேண்டியிருக்கும். இப்பனி, காலந் தாமதித்து நல்ல கோடையில்தான் தண்ணீராய் உருகும்.

அரைமைல் தூரத்திலேயே குகை தென்பட்டுவிடும். மிகச் சிறியதாயிருக்கும். நுழையும்போது 55 அடி நீளமும் 50 அடி அகலமும் உள்ளது.

இக் குகை மலையின் அடிவாரத்தில் இல்லை. சிறிது உயரத்தில்தானிருக்கிறது. பிரயாணத்தை முடித்துக்கொண்டு உள்ளே போனதும், பெரும்பாலும் 'உஸ்' என்று சுற்று உட்கார்ந்து இளைப்பாறுவார்கள். ஆனால் உள்ளே ஈரம் காத்த இடம். குளிர் சகிக்கமுடியாதது. எனவே, கால்மணி நேரத்துக்குமேல் அங்கு தங்குவது முடியாத காரியம்.

### பனிக் கடவுள்!

குகையின் இடது கை ஓரமாய்ப் பனியுடை தரித்த பீடம் ஒன்று இருக்கின்றது. அங்கு குகையின் கற்சுவரில் ஒரு மாடப்புரை. அம் மாடப்புரையில்தான் சிவபிரானுடைய உருவச்சிலை பனிக்கட்டியால் உருப்பெற்றிருக்கிறது. பனிக்கட்டி நீர், மலையுச்சியிலிருந்து குகைக்குள் ஒவ்வொரு சொட்டாகச் சொட்டிக்கொண்டேயிருக்கும். இந் நீர் உறைந்து பனிக்கட்டி யாகிறது. யாத்ரீகர்கள் இப் பனிச்சிலையைப் பார்த்ததும் அப்படியே பிரம்மித்து விடுகிருர்கள். பனி நீர் இந்த குறிப்பிட்ட இடத்தில் வந்து உறைவானேன் என்ற ஆச்சரியம் சகலருக்கும் உண்டாகிறது. அதுவும் அப்படி உறைகிறபோது, சிவபெருமானுடைய உருவத்தைப் பெறுவது அற்புதத்திலும் அற்புதமல்லவா? இந்த அதிசயச் சிவ உருவம், சந்திரனுடைய தேய்பிறைக்காலத்தில் சிறுத்துவிடும். வளர்பிறைக் காலத்தில் பெருத்துப் பெருத்துப் பூரணச் சந்திர காலத்தில் பரிபூரணமான சிவபிரானின் உருவத்தைப்பெறுகின்றது!

மே அல்லது ஜூன் மாதத்தில் இக் குகைக்கு வந்தோமானுல், நிறைந்த அமைதிதான் நிலவியிருக்கும். அழகான ஒரு ஜோடி புருக்கள் வானத்தில் பறந்து இவ் அமைதியைச் சிறிது குழப்பும். யாத்ரீகர்களோ அல்லது புரோகிதர்களோ உருவச்சிலைக்கு முன்னுல் நமஸ்கரித்துப் பிரார்த்தனை செய்வதில்லை. புரோகிதர்கள் ஆகஸ்ட் மாதத்தில், யாத்ரீகர் வர ஆரம்பிக்குமுன், இங்குவந்து தங்குவார்கள். மாரிக்காலத்தில் மீண்டும் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று விடுவார்கள்.

### அமர வாழ்க்கை

ஹிந்துக்களுடைய சம்பிரதாயப்படி, இந்தக் குகையில்தான் சிவபிரான் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் தம் பத்தினி பார்வதிதேவிக்கு அமர வாழ்க்கையின் வரலாற்றைச் சொன்னதாக ஒரு நம்பிக்கை.

மனிதவர்க்கம் நடமாடமுடியாதபடி, வெகு தூரத்துக்கப்பால், உலக சம்பந்தமற்ற பனி மூடிய இம் மலைகளில் உள்ள இக் குகையில் தனியே வீற்றிருந்து, தம் பத்தினியிடம் இவ் வரலாற்றைச் சொல்லுவதென்று சித்தம் கொண்டாராம். ஆனுல் அக் காலத்திலும் ஒட்டுக்கேட்பவர்கள், சிவபெருமான் இரகசியமாய்ச் சொன்ன அவ்வரலாற்றை ஒண்டியிருந்து கேட்டுவிட்டார்கள்! ஒரு ஜோடிப் புருக்கள் தனித்த குளிரான இடத்தை நோக்கிப் பறந்துவந்தபோது அமர வாழ்க்கை இரகசியத்தைக் கேட்டுவிட்டன! இதனுலேயே அப்புருக்கள் அமர வாழ்க்கையைப் பெறலாயின என்பது ஹிந்துக்களுடைய அபிப்பிராயம். அவைகள் முதிய பருவத்தையடைவதில்லை. சாவதும் இல்லையாம்.

இக்கதை வாஸ்தவமானதா என்பதை நன்ருக ருசுப்பித்துக்கொள்வதற்காக எவரும் இக்குகையில் நீண்டகாலம் தங்கினதில்லை. என்ருலும், அழகான புருக்கள் இக்குகையில் வசிக்கின்றன என்பது மட்டும் உண்மை!

---

# சென்னை சர்க்கார்

ஹிந்தி எதிர்ப்புக் கைதிகளை சிற்சில நாட்களுக்குள் விடுதலை செய்துவிட சென்னை சர்க்கார் முடிவிட்டிருக்கிறது.

• •

ஹிந்தி எதிர்ப்பாளர் மொத்தம் 1001 பேர்கள்தான் என்பது, அந்த எண்ணிக்கை பல நாட்களாய் அப்படியே இருப்பதுமூலம் தெரிந்துவிட்டபடியாலும்; ஹிந்தி எதிர்ப்புக் கூச்சல் தணிந்துவிட்டதாலும் சர்க்கார் இவ்வாறு முடிவு செய்தது மிகவும் சரி. வீணுகச் சிறையில் வைத்திருப்பதால் செலவுதானே ஒழிய சர்க்காருக்கோ பொதுமக்களுக்கோ என்ன லாபம்?

• •

1001 பேருடன் எண்ணிக்கை நின்றதையறிந்து, பலர் 'அது என்ன கணக்கு?' என்று கேட்கிருர்கள்.

ஒரு நல்ல காரியத்துக்குத் தருமம் செய்கிறபோது, 101 அல்லது 1001 என்று ரூபாயோ அல்லது சாமான்களோதான் தருவது வழக்கம்!

• •

ஹிந்தி பொது மொழி. அதன் வளர்ச்சிக்காக, தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபை செய்யும் ஆக்க வேலை சரியாகப் பலனளிக்காததால், சென்னை சர்க்கார் ஒரு சட்டம் இயற்ற, காங்கிரஸ்வாதிகள் அச் சட்டத்தை ஆதரிக்க, இவைகளையெல்லாம்விட சுயமரியாதைக்காரர்கள் அதை எதிர்க்க, தமிழ்நாடு முழுதும் மொழி ஆராய்ச்சியில் இறங்குவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. ஹிந்திதான் தேச பாஷை என்ற முடிவுக்கு வந்தது. ஹிந்தி வகுப்புக்கள் இப்போது சரிவர நடக்கின்றன. ஹிந்தி அவசியமா என்ற பேச்சுக்கு இடமில்லாமல் செய்த பேருபகாரிகளாகிய சுயமரியாதைக்காரர்களுக்கு வந்தனம்!

முக்கியமாக 1001 பேர் சிறைவாசம் அனுபவித்திராவிடில், இவ்வளவு பலனைக் காணமுடியாது. மகாத்மாவுக்கு ஜே! இவ்வளவு காலம் தண்டனை யனுபவித்து உயர்ந்த லட்சியத்துக்கு உதவி (!) புரிந்த சுயமரியாதைத் தொண்டர்களுக்குத் தண்டம் சமர்ப்பித்துக் கொள்ளுகின்ருேம்!

• •

சென்னைக் காங்கிரஸ் சர்க்கார் முக்கியமாக மதுவிலக்குச் சட்டம், புகையிலை வரிச் சட்டம், விற்பனை வரிச் சட்டம், ஆகியவற்றை நிறைவேற்றி வைத்திருக்கிறது.

இம் மூன்றிலும் மிகப் பிரமாதமான பெரிய சிறந்த சட்டம் விற்பனை வரிச் சட்டம். விற்பனை வரிச் சட்டம் வியாபாரிகளுக்கு மட்டு மல்லாது வாங்குவோருக்கும் லாப நஷ்டங்களை உண்டாக்கத் தக்கது. இச் சட்டத்தால் ஏழை மக்களுக்கு நன்மை யுண்டு; ஆனுல் எளிதில் நன்மையை விளங்கிக் கொள்ள முடியாத ஒரு விஷயம் உண்டென்ருல் இந்த விற்பனை வரி விஷயந்தான். அது 'வரி' என்கிற இனத்தில் இடம் பெறுவதால், மேற்கொண்டு 'ஒரு சுமை' என்றே சாதாரண மக்களால் கருதப்படுகிறது. ஆனுல் நடைமுறையில்தான் நன்மை நன்ருக விளங்கும்.

ஒரு விஷயம் மேலோட்டமாகப் பார்த்தால்கூட விளங்கும். வியாபாரிகள் விற்பனை வரியையும் சேர்த்துத்தான் அடக்கவிலையில் வைக்கப் போகிருர்கள். வாங்குவோருக்குத்தான் சற்று அதிக விலை கொடுக்க நேரிடுமே ஒழிய, வாங்கி விற்கும் வியாபாரிகள் வயிறெரிய வேண்டியதில்லை. வாங்குவோருடைய க்ஷேமத்தைக் கருதி, வியாபாரத்தில் இறங்கியுள்ள வியாபாரிகளை நாம் இதுவரையில் பார்த்ததில்லை.

மற்றும் ஒரு கேள்வி. அறிவையும் ஆத்மாவையும் கொள்ளை கொள்ளும் மதுபானத்தை, இம் மாகாணத்திலிருந்து ஒழிக்க, செலவு செய்யாமல் முடியுமா? அதுகூட இல்லை. மதுபானத்திலிருந்து பணம் வசூலித்து கல்வியறிவைப் புகட்டிவந்தோம். ஒரு புறம் அழிவு வேலையும் மறுபுறம் ஆக்க வேலையும் செய்துவந்ததால் பலன் உருப்படவில்லை. மதுபானத்தை ஒழித்தால் கல்வி கெடுமே என்ற கெட்ட வார்த்தைகள் ஒழிந்தன. மதுபானத்தை ஒழிப்போம். கல்விக்காக விற்பனை வரி தருவோம். இதுதான் நியாயம். தருமம். —ஆ. கா.

## பெண்களின் விலை நிறையைப் பொறுத்தது

மண்டி சமஸ்தானத்தில் ஜிப்ஸி ஜாதியினர் கல்யாண வயதுள்ள பெண்களை விற்கும் வழக்கம் விசித்திரமானது.

பக்குவமடைந்த பெண்களை ராத்தல் ஒன்றுக்கு ரூ. 2,3 விலையில் விற்றுவிடுகிருர்கள். இம்மாதிரி பெண்களை விற்பதற்கு ஏராளமான வரிவிதித்து சர்க்கார்வருமானமும் அடைகின்றது.

சமஸ்தானத்தில் சீர்திருத்த நோக்கமுள்ள பலர் கூடி இவ் வழக்கத்தை ஒழிக்கத் தீவிர முயற்சி எடுத்து வருகின்றனர்.

## ராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி

ராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி புதிய நிர்வாகஸ்தர்கள் தேர்தல், 25உ மதுரை ஸ்ரீ எ. வைத்தினாத அய்யர் ஜாகையில், ஜில்லா தேர்தல் அதிகாரியான ஸ்ரீ எஸ். ஏ. எஸ். பி. உடையப்பா தலைமையில் நடைபெற்றது.

மொத்த மெம்பர்கள் 39 பேருக்கு 37 அங்கத்தினர்கள் ஆஜராயிருந்தார்கள். முதலில் ஸ்ரீ காமராஜ் இந்த ஜில்லாவை சேர்ந்த பரமக்குடி டவுன் காங்கிரஸ்கமிட்டியில் காங்கிரஸ் விதியின்பிரகாரம் 750 அங்கத்தினர்கள் சேரவில்லை யென்றும் ஷை கமிட்டியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் மெம்பர்கள் சட்டப்படி தேர்தலில் கலந்து கொள்ளக் கூடாதென்றும் ஆக்ஷேபனை கிளப்பினர்.

ஸ்ரீ கே. எஸ். முத்துஸ்வாமி முன்னுல் தமிழ் நாடு தலைவராயிருந்த ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் இந்த ஜில்லாவிலுள்ள எல்லா டவுன் கமிட்டிகளையும் நியமிக்குமாறு ஜில்லா தேர்தல் அதிகாரிகளுக்குத் தந்தி கொடுத்திருக்கிருரென்றும், இப்பொழுது தேர்தல் அதிகாரி ஷை மெம்பர்களுக்கு அஜெண்டா அனுப்பி ஆஜராயிருப்பதால் சட்டப்படி இவர்களை நீக்குவது விசாரணைக் கோர்ட்டுக்குத் தான் அதிகாரமிருக்கிறது என்றும் கூறினர்.

தலைவர் தீர்ப்பு கூறுகையில் ஷை பரமக்குடி டவுன் மெம்பர்களுக்கு, தான் அஜெண்டா அனுப்பிவிட்டதாலும் தான் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியாருக்கு இந்த ஆக்ஷேபனையை எழுதியிருந்தும் நாளது தேதி வரை பதிலில்லாததால், மேற்படியார்கள் தேர்தலில் கலந்து கொள்ளலா மென்று தீர்ப்பு கூறினர்.

பிறகு தலைவர் ஸ்தானத்திற்கு ஸ்ரீ கே. காமராஜ், ஸ்ரீ கே. எஸ். முத்துஸ்வாமி ஆகிய இருவர் பிரேரேபிக்கப்பட்டு, ஸ்ரீ கே. எஸ். முத்துஸ்வாமி தன் அபேக்ஷையை வாபஸ் வாங்கிக்கொண்டதால், ஸ்ரீ காமராஜ் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

உபதலைவர் ஸ்தானத்திற்கு பரமக்குடி ஸ்ரீ டி. எஸ். சேது முதலியாரை ஸ்ரீ கே. எஸ். முத்துஸ்வாமி, பிரேரிக்க ஏகமனதாய்ப் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார். காரியதரிசி ஸ்தானத்திற்கு ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி நாயுடுவை கே. காமராஜ் பிரரேபிக்க ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, ஆமோதித்தார். ராமநாதபுரம் ஸ்ரீ பி. சோமசுந்தரத்தை ஸ்ரீ கே. எஸ் முத்துஸ்வாமி பிரரேபிக்க பரமக்குடி ஸ்ரீ கோவிந்தன் ஆமோதிக்க பாலட் முறையில் ஓட்டெடுக்கப்பட்டது. ஸ்ரீ சோமசுந்திரம் அதிகப்படியான ஓட்டுகளால் காரியதரிசியாக தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் சென்ற வருஷத்திலிருந்து காரியதரிசியாயிருந்து வருகிருர். உபகாரியதரிசி ஸ்தானத்திற்கு சின்ன காமன் பட்டி ஸ்ரீ எஸ். என். குருசாமி நாயுடுவை ஸ்ரீ கே. எஸ். முத்துஸ்வாமி பிரரேபிக்க ஸ்ரீ கோவிந்தசாமி பிள்ளை ஆமோதித்தார். வேறு எவரும் போட்டி யிடாததால் ஸ்ரீ குருசாமி நாயுடு உதவிக் காரியதரிசியாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பொக்கிஷதார் பதவிக்கு அறுப்புக்கோட்டை ஸ்ரீ ஆர். வெங்கடாமராவ் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

★ காரைக்குடி ஸ்ரீ கிருஷ்ணவில் 3-6-39 முதல் 3-வது வாரம்
தியாகபூமி (தமிழ்ப் படம்) ★



# பிரசார மந்திரியும் சினிமா நடிகையும்

★

ஹாலிவுட் சினிமாக்காரர்கள் ஹிட்லருக்கு விரோதமாகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்திருக்கிருர்கள்.

"நாஸிஒற்றனின் ஒப்புக்கொள்ளப்பட்ட குற்றங்கள்" என்ற படம் பூர்த்தியாகிவிட்டது. இன்னும் பல ஸ்டுடியோக்களும் இம் முயற்சியில் தீவிரமாயிருக்கின்றன. நாவிக் கதைகளில் ஒருமோகம் பிறந்திருக்கிறது.

"அது இங்கே நடக்கமுடியாது" எனும் படம் தயாராகிறது. சார்லி சாப்ளினுடைய "சர்வாதிகாரி" படம் விரைவில் வெளிவந்து விடும்.

விடா பரோவா ஒரு நல்ல நடிகை. செக் நாட்டைச் சேர்ந்தவள். இவள் ஹிட்லருடைய மலஸ்தாபத்துக்கு உள்ளானுள். டாக்டர் கோபெல்ஸ் 'புண்ணியவான்' இப்பெண்மீது கண் வைத்தார். இதை இப் பெண்ணின் முன்னேற்றத்தில் அக்கரை கொண்டிருந்த கஸ்டவ் பிரோலிச் (படந் தயாரிக்கும் பிரபல நடிகர்) மிகவும் ஆட்சேபித்து முட்டுக்கட்டை போட்டார். பின்னர் சச்சரவு உண்டாயிற்று. கோபெல்ஸ் காயமடைந்தார். பிரசார மந்திரியாகிய கோபெல்ஸ், தாம் காயம்பட்ட செய்தியைப் பிறர் தெரிந்து கொள்ளாதபடி செய்தது ஒரு பிரமாதமா என்ன!

கோபெல்சுக்கு ரஜா கொடுக்கப்பட்டது. விடா பரோவா பிரேக்குக்கு அனுப்பப்பட்டாள். ஜர்மெனியில் அவளுடைய படங்கள் கொளுத்தப்பட்டன. அவளுடைய பெயரை யாரும் உச்சரிக்கக்கூடாது. அவள் அங்கேயே பிலிம் சம்பந்தமான காரியங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிருள். அவள் நல்ல அழகி. அவள் ஹாலிவுட்டுக்கு எப்படியேனும் வந்துவிடுவாளாயின், நல்ல கீர்த்தி பெறுவாள் என்பது நிச்சயம்.

### இங்கிலாந்தின் ஹாலிவுட்

இங்கிலாந்தில் சினிமா ஸ்டுடியோக்கள் எங்கே இருக்கின்றன என்று எவரையேனும் கேட்டுப்பாருங்கள். அவர்கள் சொல்லுவார்கள், 'எல்ஸ்ட்ரீ' என்ற இடத்தில் இருப்பதாக.

இங்கிலாந்தில் தயாரிக்கப்படும் படங்களில் மிக மிகச் சொற்பந்தான் 'எல்ஸ்ட்ரீ'யில் தயாராகின்றன. அவைகள்கூட எல்ஸ்ட்ரீயில் இல்லை. போர்ஹாம் வுட் என்று 1½ மைலுக்கு அப்பாலுள்ள ஒரு இடத்திலேதான் தயாரிக்கப்படுகின்றன.

என்ருலும் எல்ஸ்ட்ரீ என்ற இடந்தான் உலகப் பிரக்யாதி பெற்றிருக்கிறது. அது லண்டனிலிருந்து 30மைலுக்கு வடக்கே இருக்கிறது. சிறு கிராமம். உபாயமான கடைகளும் ஒன்றிரண்டு தெருக்களுந்தான் இருக்கும். 10நிமிஷம் காரில்சென்ருல் போர்ஹாம் வுட் வந்துவிடும். அங்கேதான் பிரிட்டிஷ் படங்கள் தயாரிக்கப் படுகின்றன.

### வீண் புரளி

பெட்டி டேவிஸ்—ஜியார்ஜ் பிரண்ட் ஆகிய இருவரும் மணம் புரிந்து கொள்ளப்போகிருர்கள் என வெளி வந்துள்ள செய்தி வீண் புரளிதான். 'நாங்கள் இருவரும் சாதாரணச் சிநேகிதர்கள்தான்' என்று இவ்வதந்தி கேட்ட பெட்டி டேவிஸ் நகைத்துக்கொண்டே சொன்னுராம்.

### மெட்ரோ கோல்டுவின் மேயர்

எம். ஜி. எம். கம்பெனியார் தயாரித்துக்கொண்டிருக்கும் படங்களாவன: 'தி ஷாப் அரவுண்ட் தி கார்னர்' இதில் மார்கரட் சல்வான், ஜேம்ஸ் ஸ்டீவர்ட், பிராங்க் மார்கன் ஆகியோர் நடிக்கின்றனர்.

'தி விமன்' எனும் படத்தில் ஜோன் கிராபோர்டு நடிக்கிருர்.

பர்னர்ட் ஷா எழுதிய 'ஆப்பில் கார்ட்' நாடகத்தில் நடித்துப் பிரக்யாதிபெற்ற சர் செட்ரிக் ஹார்ட்விக், லையனல் பாரிமூருடன் சேர்ந்து 'ஆன் பாரோடு டைம்' என்ற படத்தில் நடிக்கிருர்.

### யுனைடெட் ஆர்டிஸ்ட்ல்

சாமுவேல் கோல்ட்வின் 'பிளாக் கோல்ட்' எனும் படத்தைத் தயாரிக்கிறது! ஜோல் மக்ரியா, ஜான் ஹால், டோரதி லாமர் ஆகியோர் நடிக்கின்றனர்..

அலெக்ஸாண்டர் கோர்டா கம்பெனியார் 'பாக்தாத் கள்வன்' என்ற படத்தைப் பிடிக்கப் போகிருர்களாம்.

### கமலாஜாத்

கமலாஜாத் என்பது பஞ்சாபி சினிமாப்படம். இதை வங்காள ஸென்ஸார் போர்டாரால் பரிசீலனை செய்யப்பட்டு அனுமதிக்கப்பட்டது. இதே படத்தை பஞ்சாபி ஸென்ஸர் போர்டார் இதில் ஒழுக்கத்தைப் பற்றிய விஷயம் மிகக்கேவலமாக இருக்கிறது என்னும் காரணத்தால் அனுமதிக்க மறுத்துவிட்டனர்.

### ஹாலிவுட்டில்

#### இடதுசாரியாரின் கோஷ்டி

முற்போக்கான இடதுசாரியாரில் பலர் சமூக, அரசியல், சர்வதேசக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு படம் எடுக்கும் நோக்கத்துடன் ஒரு 'மோஷன் பிக்சர் கில்டு' ஒன்று ஸ்தாபித்திருக்கிருர்கள். கில்டு "காட்டுமிராண்டிகள் பள்ளிக்கூடம்" என்ற படத் தயாரிப்புக்கு முயற்சிகளெடுத்து வருகின்றது. நடிப்பிலும், டைரக்ஷனிலும், கதையெழுதுவதிலும் சிறந்தவர்கள் ஒன்று சேர்ந்து முயற்சித்துள்ளார்கள்.

### தங்கப் பதக்கம் பரிசு

லண்டன் படங்களில் நடித்த நடிகர்களில் நடிப்புத்திறமை வாய்ந்தவர்களுள் போயருக்கும் மார்கிரட் சுல்லாவுக்கும் தங்கப் பதக்கங்கள் பரிசளிக்கப்பட்டன.

### உயரமான நடிகர்

எல்லா சினிமா நடிகர்களிலும் அதிக உயரமானவர் ஸ்ரீராபர்ட் வாட்லோ. இவர் உயரம் 8 அடி 8½ அங். இவர் ஹாலிவுட்டில் வசிக்கிருர்.

### திரிச்சூர் ருக்மனி

திருச்சூர் ஸ்ரீமதி ருக்மணியே சொந்தத்தில் தமிழ் புராணப் படம் தயாரிக்கப்போவதாயும் அதில் ஸ்ரீமதி ருக்மணியும் ஸ்ரீமதி பிரேமாவதியும் நடிப்பார்களென்றும் கேள்வி.

### கோத்தமங்கலம் சுப்பு

கொத்தமங்கலம் ஸ்ரீ சுப்பு, மோஷன் பிக்ஸர் ஸ்டுடியோவில் 4ஹாஸ்யப் படங்களில் நடிக்கப்போகிருராம்.

### கிராதா அர்ஜுனு

காரைக்குடி வீனஸ் பிக்சர்சார் கிராதா அர்ஜுனு என்ற படம் தயாரித்துள்ளார்கள். இது ராமசேஷன் டைரக்ஷனில் ஆந்திரா சினிடோனில் எடுத்த படம். அதிசீக்கிரத்தில் வெளி வந்து விடும்.

### 'ராமநாம மகிமை'

இக் கதை இராமாயணத்தின் ஓர் பகுதி. பம்பாய் ஜோதி ஸ்டுடியோவில் படம் பிடிக்கப்பட்டிருக்கிறது. மாதிரிமங்கலம் நடேசய்யர், பிரகதாம்பாள், லட்சுமணன் முதலியோர் நடிக்கிருர்கள். ஸ்ரீ. ஏ. என். கலியாண சுந்தரத்தினுல் படம் டைரக்ட் செய்யப்பட்டிருக்கிறது,

### உலகத்தில் அதிக வசூல் அளித்த படம்

இதுவரை உலகத்தில் பிடிக்கப்பட்டுள்ள எல்லா படங்களிலும் அதிக வசூல் அளித்த படம் வால்ட்டிஸ்னியின் பெண் பனியரசி அல்லது ஏழு சித்திரக் குள்ளர் என்றபடம். இப் படம் வெளியானது முதல் சுமாராக 20320000 ரூபாய் சம்பாதித்துக் கொடுத்திருப்பதாக அறிவிக்கப்படுகிறது. இதற்கு முன் அதிக வசூல் அளித்தபடம் 'பாடும் முட்டாள்'. இது சுமார் ரூ 15000000 வசூலானதாகத் தெரிகிறது.

### ஷாண்டி

கொஞ்ச காலத்திற்கு முன்பு ராய் ஹேன்வில் ஒரு சாதாரண பால்காரனுகவிருந்தார். தற்சமயம் அவர் ஒரு பிரபல நடிகராகிய ஷாண்டி என்பவரின் தகப்பனுராக விருப்பது மிகவும் அதிசயம் தரத்தக்கது. இச்சிறு குழந்தை 300 குழந்தைகளுக்கு மத்தியில் தேர்ந்து எடுக்கப்பட்டது. அப்பொழுது இக் குழந்தைக்கு வயது 11 மாதம். இவ்வளவு சிறு குழந்தையாயிருக்கும் பொழுதே அக் குழந்தையை நீண்ட காலங்களுக்கு ஸ்டுடியோவில் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். இச்சிறு குழந்தையை ஆண் குழந்தையாகவும் பெண் குழந்தையாகவும் உபயோகப்படுத்தி வந்தனர்.

### திருச்சி பிலிம் லீக் ஆண்டுவிழா

21-5-39உ திருச்சி பிலிம் லீக்கின் முதலாவது ஆண்டுவிழா வைபவம் முனிசிபல் பப்ளிக் ஹாலில் பம்பாய் ஸ்ரீ எல்லிஸ் ஆர். டங்கன் தலைமையில் நடந்தேறியது. அது சமயம் ஸ்ரீமான்கள் எப்.ஜி. நடேசய்யர், எம்.எம். சிதம்பரநாதன், கே. வி. அழகிரிசாமி, டி. கே. மாரியப்பன், டி. கமலவேணி முதலியோர் சொற்பொழிவாற்றினர்கள்.

அதில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இதுவரை தமிழில் வெளி வந்துள்ள வெற்றிகரமான படங்களெல்லாம் நாடக நடிகர்கள் சம்பந்தப்பட்ட படங்களாகையால் நாடக நடிகர்கள் சினிமாத் தொழிலுக்கு லாயக்கில்லாதவர்களென்று செய்யப்படும் பிரசாரத்துக்கு இக்கூட்டம் வருத்தம் தெரிவிப்பதோடு நடிப்புத் தொழிலை நம்பியிருக்கும் நாடக நடிகர்களை சினிமா முதலாளிகள் தாராளமாய் ஆதரிக்க வேண்டுமென்று இக்கூட்டம் முதலாளிகளைக் கேட்டுக்கொள்கிறது.

2. விஷமப் பிரசாரங்களை எதிர்க்க நடிகர்கள் உடனே முயற்சி எடுக்க வேண்டு மென்றும் அவசியமானயிடங்களிலெல்லாம் நடிகர் சங்கங்களை தோற்றுவித்து நடிகர்களின் ஐக்கிய முன்னணியை ஏற்படுத்த வேண்டுமென்றும் இக்கூட்டம் நடிகர்களைக் கேட்டுக்கொள்ளுகிறது.

3. ஜீவனோபாய நடிகர்கள் அதிகச் சம்பளம் கேட்பதாக அநேக முதலாளிகள் அஞ்சுகிருர்கள்.

ஆகவே முதலாளிகள் சௌகரியத்தை உத்தேசித்து நடிகர்கள் நியாயமான சம்பளத்தைப் பெற்று தொழில் செய்யவேண்டுமென்று இக்கூட்டம் நடிகர்களைக் கேட்டுக் கொள்ளுகிறது.

4. கண்டிராக்டு சம்பள முறைகளால் அளவுக்கு மீறிய வேகத்தில் படங்கள் தயாரிக்கப்பட்டுத் தோல்வியடைவதால் முதலாளிகள் தற்காலம் 3, 4 மாதங்கள் ஒப்பந்தம் செய்வதை 5, 6 மாதங்களாக அதிகப்படுத்தி சாவதானமாய்ப் படங்களைத் தயாரிக்க வேண்டுமென்று இக் கூட்டம் முதலாளிகளைக் கேட்டுக்கொள்ளுகிறது.

5. முதலாளிகள் நடிகர்களின் குணதோஷங்களைக் கண்டிக்கும் விஷயத்தில் நேர்முகமாய் விசாரித்தறிய வேண்டுமென்றும் சுயநலப் புரளிக்காரர்களின் சொல்லுக்குச் செவிசாய்க்கக் கூடாதென்றும் இக்கூட்டம் சினிமா முதலாளிகளைக் கேட்டுக்கொள்கிறது.

காரைக்குடி நடராஜா டாக்கீஸில் 3-6-39 சனிக்கிழமை முதல்
சைகால், கமலேஷ் குமாரி, உமா, கே. ஸி. டே, ஜகதீஷ் நடிக்கும்
"தர்திமாதா"
என்னும் நியூ தியேட்டர்ஸாரின் அற்புத ஹிந்தி பேசும் படம்.
வருகிறது! இந்திய திரையின் அழகிய நடிகை மிஸ் தேவிகாராணி நடிக்கும் உன்னத படம்????

## சென்னை ரேடியோ

**ஜூன் மீ 1 உ வியாழன்**

மாலை6-00 அ. இ. ரே. கோஷ்டிப் பாட்டு
6-15 'காசி மஜிலிகதனு'ப் பொறுக்கு மணிகள்
6-45 ஸ்ரீமதி எஸ். பி. மீனாக்ஷி வாய்ப்பாட்டு.
7-30 தஞ்சாவூர் ஸ்ரீ வி. எஸ். வேதாந்தம் ஐயங்கார் வாய்ப்பாட்டு
8-55 "சரியான ஆராய்ச்சிகள்" தனக்குத்தானே சத்ரு ஸ்ரீ கே. எஸ். ராமசாமி சாஸ்திரி
9-30 'ராக்கால கானங்கள்' பாலூர் ஸ்ரீ கே. வெங்கட்ராமய்யர் வாய்ப்பாட்டு.
10-00 சேலம் ஸ்ரீ கே. வெங்கட்ராமய்யர் பிடில்

**2 உ வெள்ளி**

மாலை5-00 அத்தங்கி ஸ்ரீ ராமமூர்த்தி வாய்ப்பாட்டு
6-35 நாடக சம்பிரதாயப்படி பாடிய பாட்டுகள். ஸ்ரீ வி. எஸ். ஆர். ஆஞ்சநேயலு ஸ்ரீ ஆதுல் நரஸிம்ஹ ராவ்!
7-15 "எனக்குப் பிடித்த கவிதை" ஸ்ரீ எஸ். டி. சுப்பிரமண்யயோகி தமிழ்ப் பேச்சு.
7-30 "காரைக்கால் அம்மையார்" ஒரு சங்கீத நாடகம்
8-30 தஞ்சாவூர் ஸ்ரீமதி ஜானகி அம்மாள் வாய்ப்பாட்டு.
8-55 ஸ்ரீ வி. சேதுராமய்யாவும் ஸ்ரீ ஆர். சே. வெங்கட்ராம சாஸ்திரியும்—பிடில்
9-30 ஐரோப்பிய சங்கீதம்.

**3 உ சனி**

மாலை6-35 ஸ்ரீமதி மல்லவரபு விஜயலக்ஷ்மி துக்கடாக்கள்.
6-45 ஆலத்தூர் சகோதரர்கள் வாய்ப்பாட்டு.
7-30 "சுபத்ரா பரிணயம்" நாடகம்
8-55 "பசியுள்ள விருந்தாளிகள்" ஸ்ரீ வி. எஸ் ராமசாமி சாஸ்திரி பேச்சு
9-30 ஸ்ரீமதி என். லக்ஷ்மிகாந்தம்மாள்— வாய்ப்பாட்டு.

**4உ ஞாயிறு**

5-15 ஸ்ரீ டி. ஆர். வைத்தீஸ்வரன் வாய்ப்பாட்டு.
6-45 ஸ்ரீதேசமங்கலம் சுப்பிரமணிய ஐயர் வீணை.
8-35 வேலூர் ஸ்ரீ டி. வி. சம்பந்தமூர்த்தி ஆர்சாரி வாய்ப்பாட்டு
8-55 ஆத்மார்த்தமான சமாச்சாரம் 'மனோதைரியம்.' ஸ்ரீமதி ஜி. துர்காபாய் பேச்சு.

**5உ திங்கள்**

மாலை6-45 'சாரங்கதரா' நாடகம்.
7-15 'அரிப்ப வக்ரம்' ஸ்ரீ வ. ரா. தமிழில் பேசுவார்.
7-30 ஈரோடு ஸ்ரீ விஸ்வநாதய்யர் பிடில்
8-55 "தனிக்காட்டு ராஜாவாக விருப்பநின் அசௌகரியம்"
9-30 ஸ்ரீமதி பி. என். ராஜலக்ஷ்மி வாய்ப்பாட்டு.

**6உ செவ்வாய்**

மாலை5-00 மாயவரம் ஸ்ரீ ஆர். கணேசன்— வாய்ப்பாட்டு.
6-00 குமாரி பாலாம்பாள் கீதம்.
6-20 குமாரி ஜே. சுகந்தி.
6-35 குமாரி பாலாம்பாவும், சுகந்தியும்—இருவர் பாடும் பக்திரஸ இசைப்பாட்டு.
6-45 தமிழ் நாடகம் 'க்ருஹசாரம்'
7-00 ஸ்ரீமதி கே. நாகாம்புஜம் வாய்ப்பாட்டு.
8-25 ஸ்ரீ டி. ஏ. கிருஷ்ணன் பாகவதர் பிடில்.
8-55 சட்டமியற்றுபவன். பேச்சு

**7உ புதன்**

மாலை5-00 ஸ்ரீ வி. ஸ்ரீனிவாசபிள்ளை நாகஸ்வரம்.
7-15 வெளிநாட்டில் ஸ்ரீ வி. டி. கிருஷ்ணசாமி தமிழ்ப்பேச்சு
7-30 கண்டவேதி ஸ்ரீ திருவேங்கடம் வாய்ப்பாட்டு.
9-30 ஸ்ரீமதி எஸ். பி. சீதாலக்ஷ்மி

## திருச்சி ரேடியோ

**ஜூன் மீ 1 உ வியாழன்**

மாலை6-00 கிராமங்களுக்கு கோஷ்டிப்பாட்டு.
6-30 ஸ்ரீ ஏ. கே. சின்னகிருஷ்ணநாயுடுவும் கோஷ்டியும் கர்நாடக பாண்டு.
7-00 'அழகே தெய்வீகம்' தமிழ்ப்பேச்சு ஸ்ரீமதி லக்ஷ்மி பாரதி.
7-15 'மிலிம் ஒலி' ரிகார்டுகள். ஸ்ரீ எம். கே. ராதாவும் ஸ்ரீமதி டி. ஏ. சுந்தராம்பாளும்.
7-30 ஸ்ரீ கே. ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை வாய்ப்பாட்டு
8-00 பிடிலும் பியானோவும் ரிகார்டுகள்—ஸ்ரீ முத்துவும் ஸ்ரீ மணியும்.
8-15 ஸ்ரீ கே. ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை வாய்ப்பாட்டு.
8-45 பல்லடம் ஸ்ரீ சஞ்சீவிராவ் புல்லாங்குழல்-ரிகார்டுகள்.
9-15 செய்திகள்

**2 உ வெள்ளி**

மாலை6-00 "நன்னிலம்" பேச்சு.
6-30 ஸ்ரீ கே. சபேசன் வீணை
7-00 'படிக்கும் பழக்கம்' தமிழ்ப் பேச்சு. ஸ்ரீ ஆர். ஜனார்த்தனம்.
7-15 கிராமபோன் ரிகார்டுகள் ஸ்ரீ டி. ஆர். நாராயணசாமியும் ஸ்ரீமதி எஸ். பி. சுந்தராம்பாளும்.
7-30 ஸ்ரீமதி எம். எஸ் திரிபுராம்பாள் வாய்ப் பாட்டு.
8-15 ஸ்ரீ கே. சபேசன்-வீணை.
8-45 ஸ்ரீமதி எம். எஸ். திரிபுராம்பாள் வாய்ப் பாட்டு.
9-15 செய்திகள்.

**3-உ சனி**

மாலை6-00 நாட்டுப்புற சுகாதாரத்தைப்பற்றிய விவாதம்
6-30 ஸ்ரீமதி தேவகுஞ்சரி வாய்ப்பாட்டு.
7-00 "அசெம்பிளியில் ஹாஸ்யம்" தமிழ்ப் பேச்சு. ஸ்ரீ எல். சட்டநாதக் கரையாளர்
7-15 ஸ்ரீமதி ருக்மணிபாலாவும் ஸ்ரீ தாசப்பாவும்—ரிகார்டுகள்.
7-30 ஸ்ரீ ஆர். சாகேதராமன்—பிடில்.
8-00 ஸ்ரீமதி வீணை தனம்மாள் ரிகார்டுகள்.
8-15 ஸ்ரீமதி தேவகுஞ்சரி—வாய்ப்பாட்டு.
8-45 ஸ்ரீ ஆர். சாகேதராமன்—பிடில்.
9-15 செய்திகள்.

**4உ ஞாயிறு**

மாலை6-00 'கமது கிராமப் பஞ்சாயத்து கூடுகிறது' பேச்சு.
6-30 ஸ்ரீ டி. கே ரெங்காச்சாரி-வாய்ப்பாட்டு.
7-00 'முத்துமாமா'—தமிழ் நாடகம்.
7-15 ஸ்ரீ எம். கே. ராதாவும் ஸ்ரீமதி டி. வ. சுந்தராம்பாளும்—ரிகார்டுகள்.
7-30 ஸ்ரீ கே. எல். நாராயணசாமி ஐயர்—வீணை.
8-00 ஸ்ரீ டி. கே. ரங்காச்சாரி வாய்ப்பாட்டு.
8-45 ஸ்ரீ கே. எஸ். நாராயணஸ்வாமி ஐயர் வீணை.
9-15 செய்திகள்.

**5உ திங்கள்**

மாலை6-00 பேச்சு. "பசுவும் கன்றும்"
6-30 முடிகொண்டான் ஸ்ரீ வி. வெங்கட்ராமையர் வாய்ப்பாட்டு.
7-00 "தொன்று தொட்டுத் தமிழ்" தமிழ் பேச்சு. ஸ்ரீ. எம். நடேச முதலியார்.
7-15 ஸ்ரீமதி எம். ஆர். சந்தானலக்ஷ்மி வாய்ப்பாட்டு. ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மி வாய்ப்பாட்டு.
7-30 கீரனூர் ஸ்ரீமதி ஜெயலெக்ஷ்மி புல்லாங்குழல்.
8-00 முடிகொண்டான் ஸ்ரீ வி. வெங்கட்ராமய்யர் வாய்ப்பாட்டு.
8-45 ஸ்ரீமதி ஜெயலக்ஷ்மி புல்லாங்குழல்.
9-15 செய்திகள்.

**6 உ செவ்வாய்**

மாலை6-00 கிராமங்களுக்குப் பேச்சு.
6-30 ஸ்ரீமதி வி. ஆர். தனம்மாள் வாய்ப்பாட்டு
7-00 'பூமாதேவியின் பிராயம்' தமிழ்ப் பேச்சு—ராவ்பகதூர் எம். வி. எஸ். அனந்தபத்மநாப ராவ்.
7-15 நந்தனார் ரிகார்கள் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள்.
7-30 மைசூர் ஸ்ரீ டி. சௌடையா—பிடில்
8-15 ஸ்ரீமதி வி. ஆர். தனம்மாள் வாய்ப்பாட்டு.
8-45 மைசூர் ஸ்ரீ டி. சௌடையா பிடில்
9-15 செய்திகள்.

**7 உ புதன்**

மாலை6-00 கிராமங்களுக்குப் பேச்சு
6-30 சுசீந்திரம் ஸ்ரீ பரசுராமய்யர் வாய்ப்பாட்டு.
7-00 ஸ்ரீ டி. லக்ஷ்மண பிள்ளை "சாஹித்யம்" தமிழ்ப் பேச்சு
7-15 ஸ்ரீமதி டி. சூரியகுமாரியும் ஸ்ரீமதி எஸ். பி. மதுரமும் ரிகார்டுகள்
7-30 'குறத்திப் பெண்' தமிழ் நாடகம்
8-00 சுசீந்திரம் ஸ்ரீ பரசுராமய்யர் வாய்ப்பாட்டு
8-45 ஸ்ரீ எஸ். நாராயணய்யங்கார் கோட்டு வாத்தியம்.
9-15 செய்திகள்.

## ஜப்பானியப் பெண்களின் முற்போக்கு

அடுப்பங்கரைகளைவிட்டு ஆலைகளில் நுழைவு

ஜப்பானில் ஆண்கள் குறைவு. பெண்கள்தான் அதிகம். எனவே, முன்பு ஆண்கள் செய்த வேலைகளில் பலவற்றை இப்போது பெண்களே செய்யவேண்டி ஏற்பட்டிருக்கின்றது.

சீனத்துடன் ஜப்பான் யுத்தம் செய்துகொண்டிருப்பதால், ஜப்பானியப் பெண்களுக்கு, கனவுகாண முடியாத அளவு சுதந்திரம் கிடைத்திருக்கிறது.

தற்போது 30 லட்சம் ஜப்பானியப் பெண்கள் ஏதேனும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். வாராவாரம் இந்த எண்ணிக்கை கூடிக்கொண்டே வருகின்றது.

யுத்தம் தொடங்குவதற்கு முன்பு, பெண்கள் யாவரும் சாதாரணமாக இந்தியப் பெண்களைப்போல, அடுப்பங்கரைகளைக் கவனிக்கிறவர்கள்தான். அவர்கள் பெரும்பாலும் தங்கள் வீடுகளைவிட்டு, வெளியிற்செல்லுகிறவர்களல்லர். இப்போது ஜப்பானியப் பெண்களைச் சர்வ சாதாரணமாகக் கடை வீதியிலும் தெருக்களிலும் நடமாடுவதைப் பார்க்கலாம்.

மேல்மாடிகளுக்கு விசைகளைத் தூக்கிவிடுவது, பஸ் கண்டக்டர் போன்ற சாதாரண வேலைகளில் இப்போது பெண்கள் ஏராளமாய் வந்து அமருகிறார்கள். இவர்களைத்தான் எளிதில் ஸ்பஷ்டமாகப் பார்க்கமுடிகின்றது. மற்றப்படி நூற்றுக்கணக்காய், ஆயிரக்கணக்காய்த் தொழிற்சாலைகளிலும், கம்பெனிகளிலும், கடைகளிலும் ஜப்பானியப் பெண்கள் புகுந்துகொண்டிருக்கின்றார்கள்.

இப் பெண்கள் நீண்ட நேரம் வேலை செய்கிறார்கள். குறைந்த கூலியை ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால் 30 யென் (ஜப்பானிய நாணயம்) சம்பாதிக்கின்றவள்கூட, தான் வேலை செய்கின்ற காரணத்தால் ஒரு சுதந்திர உணர்ச்சியைப் பெற்றுவிடுகின்றாள். இதுவரையில் காணாத ஒரு புதிய பாக்கியத்தைப் பெற்றிருப்பதாக உணர்கின்றாள். தான் சம்பாதிக்கின்றதனால், தன் இஷ்டப்படி ஒரு கணவனைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுகின்ற ஒரு உரிமையும் பெறுகின்றாள்! இந்த உரிமை தந்தையின் செலவிலேயே வாழுகின்ற பெண்களுக்குக் கிடையாது!

ஜப்பானியத் தொழிலாளர் பெண்கள் தம்முடைய சொந்த உடைகளையும் மாற்றிக்கொண்டு ஐரோப்பியப் பெண்கள்மாதிரி ஆடைகளை அணிகின்றார்களாம். ஐரோப்பிய ஆடைகளிலுள்ள பெண்கள், ஜப்பானியக் கட்டுப்பாட்டுகளுக்குக் கட்டுப்படாதவர்கள் என்கிற அபிப்பிராயமும் ஏற்பட்டு வருகின்றது.

என்றாலும் ஜப்பானியப் பெண்கள் சமூக விடுதலையை அடைவதற்கு இன்னும் நீண்டகாலம் பிடிக்கும். இப்போதும்கூட சர்வகலாசாலைகளுக்கு அவர்கள் போவதில்லை. துணையில்லாமல், இராக்காலங்களில் அவர்கள் ஓட்டல்களுக்கோ, நாடக சினிமாச் சாலைகளுக்கோ போகமாட்டார்கள்.

கணவன் சம்மதமின்றி விவாகரத்துச் செய்துகொள்ள முடியாது.

வாக்குரிமையும் இல்லை!



## இடி விழ்ச்சி

(2-ம் பக்கத் தொடர்ச்சி

இடங்களில் வைப்பது சரியல்ல என்பதுதான்.

பிறகு அவன் அதை ஒரு பழைய பானையில் போட்டு வைத்தான். அப்பானை கொஞ்சம் சுத்தப்படுத்தப் படாமலிருந்தது. அதுவும் அவனுக்குத் திருப்தியில்லை. பிறகு தண்ணீரைத் தானே எடுத்து வெளியில் ஊற்றிவிட்டு வைரத்தை எடுத்துக்கொண்டான். அத் தண்ணீரின் துர்நாற்றம் சகிக்க முடியாமலிருந்தது. ஆனால் வேலைக்காரரைக் கூப்பிட்டு ஊற்றச் செய்தால் விஷயம் வெளிக்குத் தெரிந்து விடுமோ என்ற பயம்.

அவன் இவ்வாறு இருதலைக் கொள்ளி எறும்புபோலிருக்கும் சமயம் மந்திரி வந்து சலாம் செய்தான். பாத்ஷாவுக்கு அவனிடத்தில் பூரண நம்பிக்கையிருந்தது. ஆனால் அவனுடைய அந்தச் செய்கை, மந்திரிக்கும் தெரியாமல் மறைத்து வைக்கும் செய்கை, அவனுக்கே வெட்கமாக இருந்தது. ஒன்றும் விளங்காமல் பேசாது நின்றான்.

மந்திரியே விஷயத்தைக் கிளப்பினான். இன்று கஜானாவில் வைரம் கிடைக்காமையால் நாதிர் அதிகமாக கோபித்துக்கொண்டான். என்னை நீ ஏமாற்றிவிட்டாய். ஆகையினால் நான் நகர் முழுதையும் கொளுத்திச் சாம்பலாக்குவேன். எல்லோரையும் கொன்று சுடுகாடாக்குவேன். ஒவ்வொரு வீட்டையும் கொள்ளையிடுவேன் என்கிறான் நாதிர். நான் அதற்குப் பதிலளித்ததாவது: 'நாங்கள் கஜானாவின் சாவியைக் கொடுத்துவிட்டோம். உங்களுக்கு இஷ்டமானதைச் செய்யுங்கள் என்று சொன்னேன். அவன் விஷயத்தை வெளிப்படையாகக் கூறாது வளைத்து வளைத்து என்னமோ பேசினான். குகையில் அடைபட்ட சிங்கம்போல் கர்ஜித்தான்.

மகமத்ஷாஹ்: எனக்கு அவன் முன்னால் உட்காருவதற்குக்கூடப் பயமாக இருக்கிறது. அவன் சிங்கம்போல் கர்ஜிக்கிறான். கொடிய அக்கிரமக்காரனின் கண்கள் எவ்வளவு பயங்கரமாக இருக்கிறன! மனிதன் ஒரு சனியனே. நான் இவ்வைரத்தை மறைத்து வைக்கத் தெரியாது விழித்துக்கொண்டிருக்கிறேன். சிம்மாசனம் போகட்டும். வருத்தமில்லை. ஆனால் நான் இந்த வைரத்தை எனது உடலில் உயிருள்ளவரையில் கொடுக்கமாட்டேன்.

மந்திரி: உங்கள் விரோதிகள் உங்கள் வைரத்தைக் காணாதிருக்கும்படி ஆண்டவன் அனுக்கிரகிக்கட்டும். நான் ஒரு யோசனை கூறுகிறேன். நீங்கள் இவ் வைரத்தை உங்களுடைய தலைப்பாகையில் வைத்துக்கொள்ளுங்கள். உங்களுடைய எதிரிகளுக்குத் தலைப்பாகையில் சந்தேகம் வராது.

மகமத்: (ஆனந்தக் கூத்தாடி) அல்லாஹ், நீ நல்ல யோசனை கூறினாய். நல்ல யோசனை தோன்றிற்று. அந்த மகானுபாவன் எங்கும் தேடிய பிறகு தனது முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பான். என் தலைப்பாகையில் யார் தேடமுடியும்? இதனால்தான் உனக்கு லும்மானின் பதவியைக் கொடுக்கிறேன். நீ கொஞ்சம் முந்தி வந்திருந்தால் நான் இவ்வளவு கஷ்டப்பட்டிருக்க வேண்டாம்.

4

மறுநாளே இரு பாத்ஷாக்களுக்கும் உடன்படிக்கை ஏற்பட்டது. மந்திரி நாதிர்ஷாவின் பாதங்களில் விழுந்து வேண்டிக் கொண்டான்: இப்பொழுது மூழ்கிக் கொண்டிருக்கும் இப்படகை நீங்கள் தான் கரையேற்ற வேண்டும். இல்லாவிட்டால் அல்லாஹுதான். ஹிந்துக்கள் தலைதூக்க ஆரம்பித்து விட்டனர். இராஜபுத்திரர், மாரட்டியர், சிக்கியர் எல்லோரும் தங்கள் தங்கள் பலத்தைப் பெருக்கிக் கொண்டிருக்கின்றனர். இவர்களெல்லாரும் ஒன்றாகச் சேரும் நாள்தான் முகல் ராஜ்யத்தின் முடிவு நாள். அச்சமயம் இந்த முகல் ராஜ்யப் படகு இந்நாட்டினரின் ஒற்றுமைப் படையெடுப்பின் சுழலில் அகப்பட்டு அழிந்துவிடும்.

(அடுத்தவாரம் முடிவுறும்)

மோட்டார்கார்களை அமெரிக்காவில் ஆகாயத்தில் நிறுத்தி வைத்துவிட்டு, தத்தம் காரியாலயங்களுக்கோ அல்லது வியாபார ஸ்தலங்களுக்கோ செல்கின்றார்கள்!

பெண்கள் வீதிச் சுத்தச் சங்கம் ஒன்று நியூயார்க் நகரில் ஆரம்பமாகி, நியூயார்க் நகரமுழுதும் அசுத்தமே தென்படாதபடி செய்து வருகின்றதாம். இதுவரையில் அமெரிக்காவைப்போல அசுத்தமான தேசம் வேறொன்றுமே யில்லையாம்!

## ரயில் வண்டிகளின் போக்குவரத்து கால விபரம்

### திருச்சியிலிருந்து—மானமதுரைக்கு

| ஸ்டேஷன்கள். | 25 நி. பாஸ்ட் பாஸஞ்சர். | 1 நி. இண்டோ சிலோன் எக். | 67 நி. பாஸஞ்சர். | * 33 நி. பாஸஞ்சர். | * 29 நி. பாஸஞ்சர். | 31 நி. பாஸஞ்சர். | 7 நி. தனுஷ் பாஸ்ட் பாஸஞ் |
|---|---|---|---|---|---|---|---|
| திருச்சிராப்பள்ளி ... | 3-57 | 7-30 | 10-40 | | 13-20 | 17-27 | 22-15 |
| புதுக்கோட்டை வரு | 5- | 8-33 | 12-3 | | 14-35 | 18-54 | 23-36 |
| புதுக்கோட்டை புற | 5-6 | 8-41 | 12-9 | | 14-42 | 19-0 | 23-42 |
| நமனசமுத்திரம் ... | 5-17 | 8-52 | 12-19 | | 15-0 | 19-11 | - - |
| திருமயம் ... | 5-31 | 9-8 | 12-32 | | 15-13 | 19-25 | 0-5 |
| செட்டிநாடு ... | 5-45 | 9-24 | 12-46 | | 15-27 | 19-39 | 0-21 |
| கோட்டையூர் ... | 5-55 | 9-34 | 12-55 | | 15-36 | 19-49 | 0-31 |
| காரைக்குடி வரு | 6-9 | 9-50 | 13-12 | | 15-53 | 20-6 | 0-46 |
| காரைக்குடி புற | 6-15 | 10-1 | | 14-27 | 16-39 | 20-35 | 0.57 |
| தேவகோட்டை ரஸ்தா | 6-25 | 10-9 | | 14-35 | 16-47 | 20-43 | - - |
| கல்லல் ... | 6-42 | 10-26 | | 14-52 | 17-4 | 21-0 | 1-23 |
| அரண்மனை சிறுவயல் | 6-50 | - - | | 14-58 | 17-10 | - - | - - |
| நடராஜபுரம் ... | 7- | - - | | 15-8 | 17-20 | 21-12 | 1-37 |
| நாட்டரசன்கோட்டை | 7-13 | 10-48 | | 15-21 | 17-33 | 21.25 | 1-52 |
| சிவகெங்கை .. | 7-25 | 10-59 | | 15-42 | 17-52 | 21-36 | 2-4 |
| மானமதுரை ... | 8-2 | 11-30 | | 16-14 | 18-24 | 22-5 | 2-33 |

* இக்குறியிட்ட வண்டிகள் நேரே மதுரைக்குச் செல்லுவன.

### மானமதுரையிலிருந்து—திருச்சிக்கு

| ஸ்டேஷன்கள். | 32 நி. பாஸஞ்சர் | * 68 நி. பாஸஞ்சர் | 30 நி. பாஸஞ்சர். | 2 நி. இண்டோ சிலோன் எக் | 34 நி. பாஸஞ்சர். | 26 நி. பாஸ்ட் பாஸஞ்சர் | 8 நி. தனுஷ் பாஸ்ட் பாஸ |
|---|---|---|---|---|---|---|---|
| மானமதுரை .. | | 8-14 | 12-15 | 1513 | 17-18 | 18-55 | 23 17 |
| சிவகெங்கை .. | | 8-49 | 12-51 | 15-41 | 17-53 | 19-29 | 23-49 |
| நாட்டரசன்கோட்டை | | 9-0 | 13 2 | 15 52 | 18-4 | 19-40 | 0-1 |
| நடராஜபுரம் ... | | 9-12 | 13-15 | - - | 18-16 | 19-52 | 0-15 |
| அரண்மனை சிறுவயல் | | 9-22 | 13-25 | - - | 18-27 | - - | - - |
| கல்லல் ... | | 9-29 | 13-32 | 16-13 | 18-33 | 20-4 | 0-30 |
| தேவகோட்டை ரஸ்தா | | 9 46 | 13 49 | 16 30 | 18-50 | 20-21 | - - |
| காரைக்குடி வரு | | 9-53 | 13-56 | 16-37 | 18 57 | 20-28 | 0 54 |
| காரைக்குடி புற | 6-50 | 10-3 | 14 6 | 16-47 | | 20 28 | 1-4 |
| கோட்டையூர் .. | 7-0 | 10-13 | 14-17 | 16 57 | | 20-49 | 1 15 |
| செட்டிநாடு ... | 7-10 | 10-22 | 14-27 | 17-7 | | 20-59 | 1 26 |
| திருமயம் ... | 7-24 | 10-35 | 14-41 | 17-20 | | 21-13 | 1-42 |
| நமன சமுத்திரம் ... | 7-38 | 10-48 | 14-58 | 17-33 | | 21-27 | - - |
| புதுக்கோட்டை வரு | 7-47 | 10-57 | 15-7 | 17-44 | | 21-41 | 2-4 |
| புதுக்கோட்டை புற | 7-53 | 11-3 | 15 13 | 17-50 | | 21-49 | 2-10 |
| திருச்சிராப்பள்ளி ... | 9-32 | 12-30 | 16-42 | 19-0 | | 22-58 | 3-36 |

* இக்குறியிட்ட வண்டி மதுரையிலிருந்து நேரே வருவது

## பஞ்சாங்கம்

| பர்மா. | இங் | தமிழ் | வாரம். | பரமாதி-ஸ்ரீ இங்-1939. பர்மா-1301. |
|---|---|---|---|---|
| நயோம் லாசோ | ஜூன்-ஸ்ரீ | பரமாதி-ஸ்ரீ வைகாசி-ஸ்ரீ | | |
| 15 | 1 | 18 | வியா | சது-7-31. விசா-0-28. சித்தயோகம். |
| 1 | 2 | 19 | வெள் | ○-7-22. அனு-1-59. சித்த யோகம். |
| 2 | 3 | 20 | சனி | பிர-8-30. கேட்-4-45. சித்தயோகம். |
| 3 | 4 | 21 | ஞாயி | துவி-10-53. மூலம்-8-44. அ. சித்தயோகம். |
| 4 | 5 | 22 | திங் | திரு-14-20. பூரா-13-45. சித்த யோகம். |
| 5 | 6 | 23 | செவ் | சது-18-32. உத்தி-19-32. சித்தயோகம். |
| 6 | 7 | 24 | புதன் | பஞ்-23-20. திரு-25-52. சித்த யோகம். |
| 7 | 8 | 25 | வியா | ஷஷ்-28-17. அவி-32-27. சித்த யோகம். |

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | ரெங்கூன் | பினாங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய வைகாசி | 32 | 0 7 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆனி | 31 | 0 6 9 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆடி | 32 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆவணி | 31 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| புரட்டாசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| அற்பசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| கார்திகை | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| மார்கழி | 29 | 0 6 0 | 0 4 6 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| தை | 29 | 0 6 6 | 0 4 9 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| மாசி | 30 | 0 6 6 | 0 5 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| பங்குனி | 31 | 0 6 9 | 0 5 0 | 0 4 6 | 0 4 3 | 0 4 0 |
| பிரமாதி சித்திரை | 31 | 0 6 6 | 0 4 6 | | 0 4 3 | 0 4 0 |

REG NO. M. 3888 | 16 PAGES | PRICE 1 ANNA

SUBSCRIPTIONS
Inland Annual ... Rs. 5
Burma Annual ... Rs. 6
Foreign Annual ... Rs. 7

# ஊழியன்

ADVERTISEMENTS
One Inch S. C. per insertion As. 8
Court Notice per Inch Re. 1
Long Standing Advertisements given Concessions

## The "Oolian", A Nationalist Tamil Weekly

VOL. 18 | KARAIKUDI, 1ST JUNE 1939, THURSDAY | NO. 48

### இளையாற்றக்குடி கும்பாபிஷேகம்

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

ஸ்ரீ அ. மு. க. மு. சித. முத்துக் கருப்பன் செட்டியாரின் செல்வக் குமாரன் சிரஞ்சீவி ரங்கநாதன் சிறு வயதினராயினும், சுவாமி புறப்பாட்டில் நகை சாத்துவது முதல் சகல வேலைகளிலும் கலந்து, ஆழ்ந்த யோசனைகளைச் சொல்லிவந்தார்.

சுவாமிகள் பஞ்சமூர்த்திகளும் திருவீதியில் எழுந்தருளப் பண்ணிய பிறகு போட்டோ எடுக்கப்பெற்றது.

சுகாதாரத்துக்குரிய முறையில் தண்ணீர் வசதிகளும், கக்கூஸ் வசதிகளும் இருந்தன. ஆனால் ஜனங்கள் கண்ட இடங்களிலெல்லாம் அசுத்தம் செய்தார்கள். கூடியவரையில் நாற்றுக்கணக்கான தோட்டிகளை வைத்து அப்போதைக்கப்போது சுத்தம் செய்தனர்.

நகர விருந்துக்கொட்டகை, தண்ணீர்ப் பந்தல் இவைகளுக்குப் பிரளியான் ஊருணியிலிருந்து குழாய் போட்டுத் தண்ணீர் சப்ளை செய்யப்பட்டது. அது தான் நல்ல குடிதண்ணீர். மற்ற பல குளங்களில் ஸ்நானம் செய்ய விடப்பட்டிருந்தது. குளிப்பதற்காகவும் குழாய்கள் ஆங்காங்கிருந்தன.

கும்பாபிஷேகம் ஆனபிறகு இளையாற்றங்குடிக் கோயில் நகரத்தாரைத் தவிர மற்ற 8 கோயில் நகரத்தாரும் தனித்தனியே மேளதாள விருதுகளுடன் கோயிலுக்குப் பட்டு சாத்தினார்கள்.

4-பக்கங்களிலும் கோயிலுக்கு 2 பர்லாங்குக்கு அப்பால் கார்களை நிறுத்தப் பெரிய மைதானங்கள் சப்பனிட்டு வைக்கப்பட்டிருந்தன. சாரணர்கள் அங்கு நின்று, சொந்தக்காரர்களுக்குத் தேவையான சமயத்தில் அடிக்கடி கஷ்டமில்லாதபடி கார்களைக் கொண்டுவந்து விட்டுக் கொண்டிருந்தார்கள். இதே போல் மாட்டுவண்டிகளுக்கும் தனியாக அமைக்கப்பட்டிருந்தது.

பொதுப்பட்ட பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு தனியாகப் பந்தல் போடப்பட்டிருந்தன.

டவுன் முழுதும், வழிகளிலும் கூட ரோடுகளிலும்கூட லைட் போட்டிருந்தார்கள்.

வைரவன்பட்டியிலிருந்து போவதற்கு ஒருவழியும் வருவதற்கு ஒரு வழியும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

காலையில் கும்பாபிஷேகம் முடிந்தவுடன் நகரவிடுதியில் ஸ்ரீ அம்பலவாண நாவல சுவாமிகள் மாணுக்கர் ஸ்ரீ பா. சிதம்பரநாத பிள்ளை தாம் பாடி அச்சிட்டும் கொண்டுவந்த கும்பாபிஷேக மங்கல வாழ்த்துப் பாவைப்பாடி எல்லாருக்கும் வழங்கினர். (ஒ. நி.)

---

ஹிந்தி உலக பாஷையாக ஆகுமென்று வைகுண்டம் வக்கீல் ஸ்ரீ ஆதித்ய நாடார் கூறுகிறார்.

பெர்ல் அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்
(1864-ல் இணைக்கப்பெற்றது.)
31—12—1938-வுடன் முடிவடைந்த வருடத்திய அறிக்கையின்படி

| | | |
|---|---|---|
| ஆஸ்திகள் ... | ரூ | 144 கோடி |
| வருஷ வருமானம் ... | ரூ | 26½ கோடி |
| 1938 ஜுத்திய புதிய பாலிசிகள் | ரூ | 38 கோடி |
| கொடுக்கப்பட்ட உரிமைத் தொகைகள் | ரூ | 154 கோடி |

போனஸ் 1000-க்கு வருஷத்திற்கு ரூ 20

பாலிஸிதார்களுக்கு உரிமைத்தொகை சென்னையிலே கொடுக்கப்படும்
முழு விபரங்களுக்கும் ஏஜன்ஸி நிபந்தனைகளுக்கும் அடியிற்கண்ட விலாசத்திற்கெழுதித் தெரிந்துகொள்ளவும்
W. A. பியட்செல் & கம்பெனி லிமிடெட்,
பிராஞ்சு மானேஜர்கள், 2-வது லைன் பீச் சென்னை.
மெ. மெ. கணேசன் செட்டியார், சீப் ஏஜண்ட், காரைக்குடி.

காரைக்குடி ஸ்ரீ ராமவிலாஸம் சினிமா பாலஸில் 2—6—39 வெள்ளி முதல் குதூகல ஆரம்பம்
சக்கீத வள்ளல் வி. எ. செல்லப்பா, சினிமா ராணி டி. பி. ராஜலெக்ஷ்மி, பேபி ருக்மணி
— முதலியோர் நடித்த —
பக்த குமணன் (தமிழ்ப் படம்)

Edited, Printed and Published by Raya Chockalingan for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

